# உயிரைக் கொல்லும் கொரோனாவும்
# ஏகாதிபத்திய உலகமயமும்





# உயிரைக் கொல்லும் கொரோனாவும் ஏகாதிபத்திய உலகமயமும்

## உயிரைக் கொல்லும் கொரோனா

*மக்களைப் பற்றிய எந்த அக்கறையும் இல்லாமல் உலகம் சுற்றும் வாலிபனாக நாடுநாடாகச் சுற்றிக்கொண்டிருந்த பாசிஸ்ட் மோடியை தனது சொந்தமாநிலமான குஜராத்திற்குக்கூட செல்வதற்கு அச்சம்கொள்ள வைத்ததுடன், உலகமக்கள் அனைவரையும் முடக்கிப் போட்டுவிட்டு விமானம் ஏறி இன்று உலகை வலம் வந்துகொண்டிருக்கிறது கொரோனா வைரஸ். கடந்த 2019 டிசம்பர் மாதத்தில் சீனாவின் வூஹான் மாகாணத்தில் தலைகாட்டிய இந்த வைரஸ் மிகக் குறுகிய காலத்தில் பல்கிப் பெருகியது. ஏப்ரல் 3ஆம் தேதியின் கணக்குப்படி உலக அளவில் 10,39,158 பேருக்கு இந்தநோய் உறுதிப்படுத்தப்பட்டுள்ள நிலையில் 2,20,105 பேர் குணமடைந்துள்ளனர். 55,163 பேர் பலியாகியுள்ளனர். சீனாவில் உருவாகிய இந்த நோய்த்தொற்று கிட்டத்தட்ட 81,620 பேருக்கு உறுதியாகி 3,322 பேரை பலிவாங்கியுள்ளது.*

*ஆனால், தற்போது இந்த நோய்த்தொற்றின் மையமாக ஐரோப்பிய நாடுகள் உருவாகியுள்ளது. இத்தாலியில் 1,15,242 பேருக்கு பாதிப்பு ஏற்பட்டு 13,915 பேரின் உயிரைப் பலிவாங்கி கோரத்தாண்டவம் ஆடியிருக்கிறது. ஸ்பெயினிலும் 10,935 பேரை பலிவாங்கியுள்ளது. ஈரானிலும் இதன் தாக்கம் அதிகமாக உள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக "எல்லாம் கட்டுக்குள் இருக்கிறது" என்று வீரவசனம் பேசிய ட்ரம்பின் அமெரிக்கா சீனாவையும் விஞ்சிவிட்டது. தற்போதைய நிலவரப்படி 2,45,442 பேருக்கு நோய் பரவியுள்ளதுமல்லாமல் இறப்பு விகிதம் மிக வேகமாக 6,098 பேர்வரை உயிர்ப்பலி நிகழ்ந்திருக்கிறது. உலகின் சுமார் 204 நாடுகளில் இந்த நோய் பரவி பெரும் பதற்றத்தை உருவாக்கியுள்ளது.*

*கொரோனா வைரஸ் ஏற்படுத்தும் சிக்கல் SARS cov2 என்றழைக்கக்கூடிய நுரையீரல் பாதிப்பை ஏற்படுத்தி தீவிரமான மூச்சுப் பிரச்சனையை உருவாக்கும் இந்த நோய்க்கு "கோவிட் 19" என்று உலக சுகாதார நிறுவனம்*

பெயர் சூட்டியிருக்கிறது. இந்த கொரோனா வைரஸ் தொற்று ஏற்பட்ட ஒருவர் முதலில் இருமல், பிறகு காய்ச்சல், மூச்சுவிட சிரமப்படுதல் எனப் படிப்படியாக கடும்நிலையை அடைந்து பெரும்பாலோருக்கு சிறுநீரகப் பாதிப்பையும், நுரையீரல் பாதிப்பையும் ஏற்படுத்தி உயிரிழப்புக்குக் காரணமாகிறது என்று மருத்துவர்கள் கூறுகிறார்கள். மேலும் இந்த நோய்த்தொற்று ஏற்பட்டு 14 நாட்கள் வரையிலும்கூட அறிகுறிகள் தெரியாமல் இருக்கும் என்பதால், நோய்த்தொற்று ஏற்பட்டவர்கள் சகஜமாகப் புழங்கும்போது அது பலருக்கும் தொற்றுவதற்கு காரணமாகிவிடுகிறது என்பதுதான் இதன் தீவிரத்தன்மையை உணர்த்துகிறது. நோய் எதிர்ப்புச் சக்தி குறைவாக உள்ளவர்களுக்கு அது தீவிரமான தாக்கத்தை ஏற்படுத்துகிறது. ஏற்கனவே நீரிழிவு நோய், உயர் இரத்த அழுத்தம், ஆஸ்துமா போன்ற தீவிர நோய்க்கு ஆளானவர்கள் மோசமான பாதிப்புக்கு ஆளாகி உயிரிழப்பும் ஏற்படுகிறது. அனைவரையும் இந்த நோய்த்தொற்று பாதித்தாலும் குழந்தைகளுக்கு பெரும் கேட்டினை விளைவிக்கவில்லை என்பது ஆறுதல். அதேவேளையில் 50 வயதிற்கு மேற்பாட்டோரை பெருமளவில் பாதிப்புக்கு உள்ளாக்குகிறது.

உயிரிழப்பின் அளவில் முதியவர்களே அதிகம் உள்ளனர். உண்மையில் நோய்த்தொற்றுக்கு ஆளானவர்களைக் கணக்கில் கொண்டால் மரணவிகிதம் என்பது 5%ற்கும் குறைவு என்றாலும், இது சமூகப் புழக்கத்தின் மூலமாகப் பரவுவதின் காரணமாக நோய்த்தொற்றின் வேகம் அதிகரித்திருப்பதும், இதைக் கட்டுப்படுத்துவதற்கான மருந்துகள் இப்போதுதான் ஆய்வு நிலையில் இருப்பதாலும், அது பயன்பாட்டுக்கு வர இன்னும் ஓராண்டிற்கு மேல் ஆகக்கூடும் என்பதாலும், அதற்குள் இதன் விளைவால் அதிக உயிர்களைப் பறிகொடுக்க வேண்டியிருக்குமோ என்ற அச்சமும் பதற்றத்தை அதிகரித்திருக்கிறது.

### உலகநாடுகளும், ஊரடங்கும்

கோவிட் 19 என்கிற இந்த வைரசின் தொற்று வேகமானது. ஏற்கனவே உள்ள வைரசுகளின் தொற்று வேகத்தைவிட அதிகமாக, அதாவது ஒரு நபரிலிருந்து சராசரியாக 2.6

லிருந்து 2.9 நபருக்கு பரவும் தன்மை கொண்டதாக உள்ளது. மிகவேகமாக பல இலட்சம் பேரைத் தொற்றியுள்ளது. மருத்துவரீதியாக அதை எதிர்கொள்வதில் பெரிய அளவிலான நெருக்கடி உருவாகியுள்ளது. அதனால், அதிகப்படியான உயிரிழப்புகளைச் சந்திக்க வேண்டிவரும் என்பதால் மக்கள் அதிகப்படியாகக் கூடுவதை தவிர்ப்பதின் மூலம் தொற்றின் வேகத்தைக் கட்டுப்படுத்த உதவும் என்ற அடிப்படையில் சீனா கடைபிடித்த ஊரடங்குத் திட்டத்தை உலகநாடுகள் அனைத்தும் கடைபிடிக்கத் தொடங்கியுள்ளன. ஆனால், தென்கொரியா, வியட்நாம், ஜப்பான், ஜெர்மனி, இரஷ்யா, கியூபா போன்ற நாடுகள் இதுபோன்ற ஊரடங்கு எதையும் அறிவிக்காமலேயே நோய்க்கண்டறிதலுக்கான பரிசோதனை முறையைத் தீவிரப்படுத்தி அதிகப்படியானவர்களுக்கு பரிசோதனை நடத்தியதின் மூலம் தொற்றின் வேகத்தைக் கட்டுப்படுத்தியதோடல்லாமல், உயிரிழப்புகளையும் கட்டுப்படுத்தியுள்ளது. இவ்வாறு மாறுபட்ட அணுகுமுறைகள் கண்முன் கண்ணாடியாக இருக்கையில் போதுமான ஆலோசனையோ, இதை எதிர்கொள்வதற்கான திட்டமோ எதுவுமின்றி இந்திய அரசு ஊரடங்குத் திட்டத்தை மட்டுமே நடைமுறைக்குக் கொண்டுவந்துள்ளது.

கிட்டத்தட்ட உலகின் பல்வேறு நாடுகளும் ஊரடங்கை அமல்படுத்தி மக்களை வீடுகளுக்குள் முடக்கிவைக்கும் உத்தியையே கடைபிடிக்கின்றன. இதன்விளைவாக உலக நாடுகளுக்கு இடையிலான விமானப் போக்குவரத்து முற்றிலும் முடக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு நாட்டிலும் தொழிற்சாலைகள், வணிகவளாகங்கள், உணவகங்கள், கேளிக்கை விடுதிகள், தியேட்டர்கள், மக்கள் கூடும் கடற்கரைகள், பூங்காக்கள் ஆகியவை மூடப்பட்டுள்ளன. பல்வேறு பகுதிகளுக்கிடையிலான இரயில், பேருந்து, ஆட்டோ, டாக்ஸி போன்ற போக்குவரத்துகளும் முற்றிலுமாக முடக்கப்பட்டுள்ளன.

ஏற்கனவே, மிகை உற்பத்தி நெருக்கடியில் சிக்கித் தவிக்கும் உலகப் பொருளாதாரம் இந்த முடக்கங்களின் காரணமாக மேலும் சீர்குலைவு அடைவதுடன், கோடிக்கணக்கான

தொழிலாளர்கள் மற்றும் அமைப்பாக்கப்படாத உழைக்கும் மக்களின் வேலைவாய்ப்பு பறிபோனதுடன், வருவாயும் பறிக்கப்பட்டுவிட்டது. ஏகாதிபத்திய நிதிமூலதனத்தின் சுரண்டல் கொள்ளைக்காக உலகநாடுகள் முழுவதும் மக்கள் நல அரசுக் கொள்கைகளைக் கைவிட்டு, உலகமயம், தாராளமயம், தனியார்மயக் கொள்கைகளினால் நிரந்தர வேலைவாய்ப்புகள் பறிக்கப்பட்டதுடன் அவர்களுக்கான சேமநலக் கொள்கைகள் கைவிடப்பட்டு தற்காலிக ஊழியர்களைக் கொண்டே அனைத்துப் பணிகளும் நடைபெற்றுவரும் தற்போதைய நிலையில் வேலைகள் நடக்கவில்லையென்றால் அவர்களுக்கு சம்பளமும் இல்லை, சாப்பாடும் இல்லை. மேலும், கட்டுமானத் தொழிலாளர்கள், ஆட்டோ ஓட்டுபவர்கள், காய்கறி வியாபாரம் செய்பவர்கள், சிறுகடை வியாபாரம் செய்பவர்கள், சாலையோர வியாபாரம் செய்பவர்கள், இரயில்களில் வியாபாரம் செய்பவர்கள், எனகோடிக்கணக்கான மக்கள் வருவாய் இன்றி முடக்கப்பட்டுள்ளனர். கொரோனாவிற்காக உயிர்பயம் கொண்டு வீடுகளில் முடக்கப்பட்ட ஏழைமக்கள் வறுமைக்கு - உணவில்லாமல் பட்டினியால் - பலியாவதற்கான நிலைமையே இன்று உருவாக்கியிருக்கின்றன.

## ஊரடங்கை மட்டுமே கொரோனா சிகிச்சையாக சித்தரிக்கும் மோடி கும்பல்

கொரோனாவின் பரவுதலைக் கட்டுப்படுத்த ஊரடங்கை அறிமுகப்படுத்திய சீன அரசு அதைமட்டும் நம்பி சும்மா இருக்கவில்லை.முடக்கப்பட்ட மக்களுக்கு உணவுப்பொருட்கள், உடை, எழுதுபொருட்கள், குழந்தைகளுக்கான விளையாட்டுப் பொருட்கள் உட்பட யாவும் வீட்டிற்கே கிடைக்கும் வகையில் ஏற்பாடுகளைச் செய்தது. ஒரே வாரத்தில் 1000 படுக்கைகள் கொண்ட தற்காலிக மருத்துவமனையை உருவாக்கியது. பாரம்பரிய சீன மருத்துவத்தை மாற்று மருத்துவமாகப் பயன்படுத்தியது. புதிய தடுப்பு மருந்துக்கான ஆய்வுகளை முடுக்கிவிட்டுள்ளது. இவ்வாறு கொரோனா தடுப்புக்கான பல்வேறு நடவடிக்கைகளை அந்த அரசு மேற்கொண்டது. ஆனால், இந்திய அரசோ ஊரடங்கை மட்டுமே கொரோனாவுக்கான

சிகிச்சை என்பதுபோல் போலீசை வைத்துக்கொண்டு காட்டுமிராண்டித்தனமான ஊரடங்கை தீவிரப்படுத்தி வருகிறது. இலட்சக்கணக்கான புலம்பெயர்ந்த தொழிலாளர்கள் போக்கிடமின்றி டெல்லியின் பேருந்து நிலையத்தில் கூடியபோதும்கூட எந்தவிதமான மாற்று ஏற்பாடுகள் பற்றியும் கருத்தில் கொள்ளாது மௌனம் சாதித்தது மோடி கும்பல். அந்தத் தொழிலாளர்கள் குழந்தை குட்டிகளோடு பலநூறு கிலோமீட்டர்கள் நடக்கத் தொடங்கியபோதும் எந்தவிதமான சலனத்தையும் வெளிப்படுத்தவில்லை இந்த மோடி கும்பல். இப்படிப்பட்ட ஈவு இரக்கமற்ற இந்தக் கும்பல்தான் கொரோனாவுக்கான மருத்துவப் பணியில் ஈடுபட்டுள்ளோருக்கு, மருத்துவர்களுக்கு ஆதரவாக கைதட்டுங்கள் என்றும், கொரோனாவை எதிர்த்துப் போராட விளக்கேற்றுங்கள் என்றும் மக்களை ஏமாற்றி வருகிறது. உண்மையில் கொரோனாவைக் கட்டுப்படுத்தவும், மருத்துவப் பணியாளர்களைப் பாதுகாக்கவும் இந்த அரசு எந்த அளவிற்கு முனைப்புக் காட்டுகிறது என்பதை இந்த அரசின் நிதித் திட்டத்தை கவனித்தால் விளங்கிக் கொள்ளமுடியும்.

## கொரோனா பாதிப்பை எதிர்கொள்ள மோடி கும்பலின் நிதி ஒதுக்கீடு ஒரு மாபெரும் மோசடியே

பல்வேறு மேற்கத்திய நாடுகள் மக்களுக்கும், நிறுவனங்களுக்கும் வரிச்சலுகை, நிதிஉதவிகள், ஆலைமூடல் காலத்திற்கான ஊதிய உதவிகள் என பல்வேறு திட்டங்களை அறிவித்து அமல்படுத்தி வருகின்றன. ஆனால், இந்தியாவில் கேரளா, ஒரிசா அரசுகளைத் தவிர பிற மாநில அரசுகள் மற்றும் மத்திய அரசு முழுமையான அவசரகாலத் திட்டம் எதையும் அறிவிக்கவில்லை. தமிழக அரசின் அறிவிப்புகளோ வெறும் 3250 கோடி ரூபாய் என்பதாகவே உள்ளது. பாசிச மோடி கும்பலோ ஏழைகளுக்கு உடனடியாக உதவக்கூடிய உருப்படியான திட்டமின்றி பெயரளவிற்கான உதவியையே அறிவித்திருக்கிறது. பாதிக்கப்பட்ட உழைக்கும் மக்களுக்கு வாழ்வூதியம் கேட்டால் கைச்செலவுக்கான சலுகைத்தொகையைகூட

அறிவிக்கவில்லை. இது எந்தவகையிலும் ஏழைகளுக்கு உயிர்வாழ உதவப்போவதில்லை.

கொரோனா போன்ற கொள்ளைநோயை எதிர்கொள்வதில் இரண்டுவிதமான பிரச்சனைகள் உருவாகின்றன. முதலாவதாக இந்த நோயைக் கட்டுப்படுத்துவதற்கான நடவடிக்கைகளாக சுகாதார மேம்பாட்டுப் பணிகள், நோயாளிகளைக் கண்டறிவதற்கான பரிசோதனைக் கருவிகள், நோய்த்தொற்றுக்கு ஆளானவர்களை தனிமைப்படுத்தி சிகிச்சை அளிப்பதற்கான படுக்கைவசதிகளை அதிகப்படுத்துதல், தீவிர சுவாசப் பிரச்சனைக்கு உள்ளாகுபவர்களுக்குப் போதுமான சுவாசக் கருவிகளை ஏற்பாடு செய்வது என்பதுடன் மருந்துகள், மருத்துவர்கள், மருத்துவப் பணியாளர்கள் என எல்லாவற்றையும் போதுமான அளவில் தயார்நிலையில் வைப்பதற்குத் தேவையான நிதியை மத்திய அரசு அறிவித்திருக்க வேண்டும். அதற்கு தேசியப் பேரிடர் நிவாரண நிதியைப் பயன்படுத்தலாம்.

ஆனால், மோடி அரசு வெறும் 15,000 கோடி ரூபாயை இதற்காக ஒதுக்கியுள்ளது. மருத்துவர்களுக்கும், செவி-லியர்களுக்கும் போதுமான பாதுகாப்புக் கவசங்கள், உடைகள் இல்லாததின் காரணமாக இன்று ஏராளமான மருத்துவர்களும், செவிலியர்களும் நோய்த்தொற்றுக்கு ஆளாகியுள்ளனர். இதற்கான பணிகளில் எந்தவிதமான அக்கறையும் காட்ட மோடி அரசு தயாரில்லை.

இரண்டாவதாக இந்த ஊரடங்கு உத்தரவினால் வாழ்வின் அனைத்துத் துறைகளும் முடங்கிப்போன நிலையில் அதனால் பாதிக்கப்பட்டுள்ள மக்களுக்கு உயிர்வாழ்வதற்கும், நோயை எதிர்கொள்வதற்குமான ஊட்டச்சத்துள்ள உணவுகளுக்குத் தேவையான நிதி உதவியை அளிக்கவேண்டியது அரசின் கடமையாகும். இவையெல்லாவற்றிற்கும் சேர்த்து இந்திய அரசு குறைந்தபட்சம் 7 இலட்சம் கோடி ரூபாய் ஒதுக்கினால் மட்டுமே சமாளிக்க முடியும் என்று பொருளாதார வல்லுனர்கள் கூறுகிறார்கள். ஆனால், நமது நிதியமைச்சர் அறிவித்த திட்டத்தின் இலட்சணத்தை பின்வரும் விவரங்களிலிருந்து நாம் அறிந்துகொள்ளலாம்.

கொரோனா வைரஸ் பரவாமல் தடுப்பதற்காக ஊரடங்கு உத்தரவு அறிவிக்கப்பட்டுள்ள நிலையில், மார்ச் 26ஆம் தேதியன்று மோடி கும்பல் ஒரு நிதித் தொகுப்பை அறிவித்தது. இது ஊரடங்கு உத்தரவு அமலில் இருக்கும் 21 நாட்களில் மோசமடைந்துவரும் பொருளாதார நிலைமையை மேம்படுத்த உதவும் என்று கூறப்பட்டது.

நிதி உதவிகள், தற்போதைய சூழ்நிலைக்கு எதிர்பார்த்ததை விட மிக மிகக் குறைவு என்பதுடன், போதுமானதாகவும் இல்லை. வாழ்வாதாரத்தை இழந்து நிற்கும் மக்களுக்கு இந்த நிதி உதவி நிச்சயமாக போதுமானதாக இருக்காது. இந்த நிதித் தொகுப்பு ஒதுக்கீடு செய்வதில் மோடியின் செயல்பாடு மக்களைப் பற்றிய எந்த ஒரு கவலையும் கொள்ளவில்லை என்பது இதன் மூலம் வெட்ட வெளிச்சமாகியுள்ளது.

குறிப்பாக அமைப்புசாராத் துறையில் 90 சதவீத மக்கள் பணிபுரிகின்றனர். அவர்களுக்கு சட்டரீதியான தீர்வு எதுவும் இல்லை. அவர்களின் வாழ்வாதாரத்தை ஒழுங்குபடுத்துவதற்கு எந்தவொரு சட்டப் பாதுகாப்பும் கிடையாது என்பதும், கோடிக்கணக்கான நகர்ப்புற மற்றும் கிராமப்புற தொழிலாளர்கள் அமைப்புசாராத் துறையில் பணியாற்றுவதும் குறிப்பிடத்தக்கது. சமூகத்தின் ஏழ்மையான இந்த மக்கள்தான் எந்தவொரு பொருளாதார ஏற்றத் தாழ்வுகளாலும் அதிகம் பாதிக்கப்படுகின்றனர். மக்கள் தங்களின் தேவைகளை தினசரி, வாராந்திர கூலி மற்றும் மாத ஊதியம் பெற்று, அதில் தான் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்றனர். திடீரென்று வருமானம் நின்றுபோய்விட்டால், அதை சமாளிக்க அவர்களிடம் சேமிப்பு எதுவும் இருப்பதில்லை. நாடு தழுவிய ஊரடங்கின் காரணமாக நாட்டில் பொருளாதார நடவடிக்கைகள் முழுமையாக ஸ்தம்பித்து நிற்கும் நிலையில், இந்திய சமுதாயத்தின் இந்தப் பிரிவினர்தான் அதிகளவில் பாதிக்கப்படுவார்கள்.

கொரோனா வைரஸின் தாக்குதலில் இருந்து நாட்டை பாதுகாக்க 21 நாள் “லாக் டவுன்” என்ற ஊரடங்கை அறிவிப்பதற்கு முன்னதாக, நாட்டின் பலவீனமான மக்களுக்கு உதவ பொருளாதாரத் தொகுப்பு மற்றும் வளங்களை அரசு அறிவித்திருக்க வேண்டும். ஆனால், மத்தியில் ஆட்சியில்

*உள்ள மோடி கும்பல் அவ்வாறு செய்யாமல் மீண்டும் தன்னுடைய பாசிச முகத்தைக் காட்டியுள்ளது.*

*இந்த நீண்ட ஊரடங்கு அறிவிப்பானது, தொழிலாளர்கள் மற்றும் ஏழைகளின் வாழ்வாதாரத்தை முடக்கிவிட்டது. 21 நாள் ஊரடங்கு உத்தரவு அறிவிக்கப்பட்ட 48 மணி நேரத்திலேயே, அதற்கான திட்டமிடல் போதுமானதாக இல்லை என்பது நிதர்சனமாக வெளிப்பட்டது. இதனால் மக்கள் பணப் பற்றாக்குறை மற்றும் பட்டினியால் பாதிக்கப்பட்டனர்.*

*இத்தகைய சூழ்நிலையில், நிதியமைச்சர் நிர்மலா சீதாராமன் கொரோனா வைரஸ் தடுப்பு நிதி உதவித் தொகுப்பை அறி-வித்திருக்கிறார். மக்களின் பிரச்சனைகளை தீர்க்க மோடி கும்பல் வக்கற்று அம்மணமாக நிற்கிறது. மக்களுக்கு ஏற்பட்ட தேவைகளை நிறைவேற்ற நிர்மலா சீதாராமன் தவறிவிட்டார்.*

*1.7 லட்சம் கோடி நிவாரணத் தொகுப்பை அறிவித்துள்ளதாக மோடி கும்பல் கூறியது. இந்தத் தொகை 2019-20 நிதியாண்டில் இந்தியாவின் திருத்தப்பட்ட மொத்த உள்நாட்டு உற்பத்தியில் 0.83 சதவீதம் மட்டுமே. கொரோனா வைரஸிலிருந்து எழும் பொருளாதார நெருக்கடிக்கு மற்ற நாடுகள் தங்கள் பொருளாதாரங்களின் அளவிற்கு ஏற்ப மிகப் பெரிய பொருளாதார நிதியுதவியை அறிவித்துள்ளன. அதைப் பார்க்கும்போது, இந்திய அரசின் நிதி ஒதுக்கீடு மிக மிகக் குறைவு.*

*ரூ.1.7 லட்சம் கோடி நிவாரணப் தொகையானது தற்போதைய பரிமாற்ற விகிதத்தில் இந்தத் தொகுப்பு 22.7 பில்லியன் ஆகும். இதை அமெரிக்கா அறிவித்த 2 டிரில்லியன் டாலர் அல்லது இங்கிலாந்து அறிவித்த சுமார் 200 பில்லியன் டாலர் அல்லது இத்தாலி அறிவித்த 45 பில்லியன் டாலர் (இது இந்தியாவை விட மிகச் சிறிய பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடு) உடன் ஒப்பிடுகையில் மிக மிக குறைவாகும். கனடா அரசாங்கம் கூட (மக்கள்தொகையில் இந்தியாவின் 1 சதவிதமே உள்ள நாடு)* COVID *19 ஆல் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவ 27 பில்லியன் டாலர் மானியமும் 55 பில்லியன் டாலர் கடனும் வழங்கியிருக்கிறது. இந்தியாவின் மக்கள்தொகையில்*

ஆறில் ஒரு பங்கிற்கும் குறைவானதும் 20 கோடி மக்கள் தொகை கொண்ட பாகிஸ்தான் கூட கோவிட் -19 நோயால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவ 1.2 லட்சம் கோடி ரூபாயை ஒதுக்கியுள்ளது குறிப்பிடதக்கது.

மோடி கும்பல் அறிவித்துள்ள இந்த சொற்பமான நிதித் தொகுப்பும் கூட உண்மைக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. நிதியமைச்சர் நிர்மலா சீதாராமன் அறிவித்த தொகுப்பை சற்று கூர்ந்து கவனித்தால், நிதித் தொகுப்பை அறிவித்தபோது, ஒவ்வொரு பகுதிக்கும் உள்ள தொகையை தனித்தனியாக குறிப்பிட்டார். அவை அனைத்தையும் கூட்டிக் கழித்துப் பார்த்தாலும், மொத்த நிதித் தொகுப்பின் மதிப்பு ஒரு லட்சம் கோடி ரூபாய் தான் வருகிறது.

அறிவிப்பு எண் -1: மன்ரேகா (மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலைவாய்ப்பு) திட்டத்தின் கீழ், வேலை செய்பவர்களின் ஊதியம் நாளொன்றுக்கு 20 ரூபாய் என்ற அளவில் உயர்த்தப்படும். அதற்காக நிதித்தொகுப்பில் 5,600 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. சில நாட்களுக்கு முன்பு, மன்ரேகாவில் (மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலைவாய்ப்பு உறுதியளிப்பு சட்டம்) தொழிலாளர்களின் ஊதியத்தை அதிகரிப்பதாக அரசாங்கம் அறிவிப்பை வெளியிட்டது. இது ஆண்டுதோறும் செய்யப்படுவதுதான். ஆனால், இப்படி அதிகரிக்கப்பட்ட ஊதியமும், ஊரடங்கால் வேலை இல்லாமல் பாதிக்கப்பட்ட ஏழைகளுக்கு பயனற்றது. ஏனென்றால் இவர்கள் அனைவரும் சமுதாய விலகலைப் பின்பற்ற வேண்டும்.

அறிவிப்பு எண்-2: 80 கோடி மக்களுக்கு மூன்று மாதங்களுக்கு கூடுதல் ரேஷன் வழங்கப்படும். ஒவ்வொரு குடும்பத்திற்கும் மாதந்தோறும் ஒரு கிலோ பருப்பு வகைகள் வழங்கப்படும். இதற்கான பட்ஜெட் 40 ஆயிரம் கோடி. மாதம் தோறும் ஒரு கிலோ பருப்பு ஒரு குடும்பம் உயிர் வாழ்வதற்கு போதுமானது இல்லை. இது மிகக் குறைவான நிவாரணம் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

*அறிவிப்பு எண்-3: சுய உதவிக்குழுக்களுக்கான கடன் தொகையை 10 லட்சத்திலிருந்து இருபது லட்சமாக உயர்த்த வேண்டும். ஊரடங்கு அமலில் உள்ள காலத்தில் இதுவும் உடனடியாக மக்களை சென்றடையப் போவதில்லை.*

*அறிவிப்பு எண் 4: மூன்று மாதங்களில் 20.4 கோடி பெண்களின் ஜன்-தன் கணக்குகளில் 1,500 ரூபாய் போடப்படும். பட்ஜெட்- 30,000 கோடி. அத்தியாவசிய பொருட்களின் விலைகள் ஏற்கனவே பன்மடங்கு அதிகரித்துள்ளன. நாட்டின் பல பகுதிகளிலும் பொருட்களின் விலைகள் இனி குறையாது. எனவே, வேலைவாய்ப்பு இல்லாதபோது, பல பகுதிகளில் வசிக்கும் மக்களின் தினசரி வாழ்க்கைக்கான செலவு அதிகரிக்கப் போகிறது. மாதத்திற்கு ஐநூறு ரூபாய் என்பது மிகக் குறைந்த தொகை. இதை வைத்துக் கொண்டு மக்களின் வாழ்வாதாரத்தை உத்திரவாதம் செய்ய முடியாது. அதுவும் இந்த நிதி பெண்களின் வங்கிக் கணக்குகளுக்கு மட்டுமே.*

*அறிவிப்பு எண் -5: 8.7 கோடி விவசாயிகளுக்கு ஏப்ரல் மாதம் பிரதமர் கிசான் சம்மன் நிதியின் கீழ் இரண்டாயிரம் ரூபாய் வழங்கப்படும். பட்ஜெட் - 16 ஆயிரம் கோடி. நில உரிமை வைத்திருக்கும் விவசாயிகளுக்கு இந்த தொகையை ஏப்ரல் மாதத்தில் வழங்க ஏற்கனவே திட்டமிடப்பட்டிருந்தது. இது ஒரு தனிப்பட்ட உதவித்தொகை அல்ல. நிலமில்லாத அல்லது பிறருடைய வயல்களில் பணிபுரியும் மற்றும் விவசாயிகள் மற்றும் விவசாயக் கூலிகளில் பெரும்பாலானோர் இந்த திட்டத்தால் எந்த நன்மையும் பெற மாட்டார்கள்.*

*அறிவிப்பு எண் 6: அறுபது வயதுக்கு மேற்பட்டவர்கள் மற்றும் விதவைகளுக்கு மூன்று மாதங்களுக்கு ஆயிரம் ரூபாய் உதவி கிடைக்கும். பட்ஜெட் - மூவாயிரம் கோடி. இந்த சட்டத்தின் கீழ், கைம்பெண்கள் மற்றும் வயதானவர்களுக்கு இருநூறு முதல் ஐநூறு ரூபாய் வரை ஓய்வூதியம் வழங்குவதற்காக மத்திய அரசு ஏற்கனவே மாநிலங்களுக்கு நிதியுதவி வழங்குகிறது. இதனால் பயனடையப் போவது 130 கோடி மக்கள் தொகை கொண்ட நாட்டில் வெறும் 3 கோடி பேர்தான். அதனால் பெரிய அளவு பயன் ஏதும் இல்லை.*

அறிவிப்பு எண் -7: உஜ்வாலா திட்டத்தின் கீழ் 8 கோடி குடும்பங்களுக்கு 3 மாதங்களுக்கு இலவச எரிவாயு சிலிண்டர்கள். பட்ஜெட் - 13 ஆயிரம் கோடி. 2019-20 விலையில் அரசாங்கம் இலவச சிலிண்டர்களை விநியோகித்தால், சிலிண்டர் ஒன்றின் விலை சுமார் 681 ரூபாயாக இருக்கும். வாடிக்கையாளர்கள் இந்த சிலிண்டர்களை 500 ரூபாய்க்கு பெறுகின்றனர். அப்படியிருந்தும், ஆண்டுக்கு சராசரியாக நான்கு சிலிண்டர்களுக்கு மேல் எந்தவொரு குடும்பமும் பயன்படுத்தவில்லை. அதிகபட்சப் பயன்பாடு இருந்தாலும்கூட, பத்தாயிரம் கோடி ரூபாய்க்கும் குறைவாகவே செலவாகும்.

அறிவிப்பு எண் 8: 100க்கும் குறைவான ஊழியர்களைக் கொண்ட நிறுவனத்தின் இ.பி.எஃப் பங்களிப்பில், ஊழியர்கள் மற்றும் நிறுவனத்தின் பங்கை அரசாங்கம் செலுத்தும். இதில் அந்த நிறுவனத்தின் 90 சதவீத ஊழியர்கள் 15 ஆயிரம் அல்லது அதற்கும் குறைவான சம்பளத்தைப் பெறுபவர்களாக இருக்க வேண்டும். 100க்கும் குறைவான ஊழியர்கள் வேலை செய்யும், மற்றும் ஊழியர்களின் மாத ஊதியம் 15,000க்கும் குறைவாக இருக்கும் ஒவ்வொரு நிறுவனமும் இதன் மூலம் பயனடைய முடியும் என்று பத்திரிகைகளுக்கு வெளியிடப்பட்ட அறிக்கையில் எழுதப்பட்டுள்ளது. இ.பி.எஃப்-பின் பயனாளிகளில் பெரும்பாலானோருக்கு இது பயனளிக்காது. யதார்த்தம் என்னவென்றால், அரசாங்கத்தின் இந்த முயற்சியால் நாட்டின் மொத்தம் 47 கோடி இ.பி.எஃப் கணக்கு வைத்திருப்பவர்களில் 16 சதவீத பேருக்கு மட்டுமே பயன் கிடைக்கும்.

ஆனால், நேர்மையாகச் சொல்வதென்றால், உண்மையில், இது மக்களுக்கு பெரிய அளவில் உதவிகள் செய்வதாக சொல்லி, மூளைச்சலவை செய்வதே. மேலே குறிப்பிட்டுள்ள அறிவிப்பு எண் 1 இருந்து 8 வரை கூட்டினால் 1 லட்சம் கோடி கூட வராது இதுதான் பாசிச மோடியின் பித்தலாட்டம். உலகெங்கிலும் அபாய மணிகள் ஒலித்தபோது கூட, மோடி கும்பல் மக்களின் தேவைகளை உணர்ந்து செயல்படாமல், பொருளாதாரத்தை காப்பாற்றுவதற்கான நிதித் தொகுப்பை

*உருவாக்கும் திட்டங்களையும் மேற்கொள்ளவில்லை. மாறாக, பன்னாட்டு உள்நாட்டு பெரும் கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு வரிச் சலுகைகளை வாரிவழங்கியிருக்கிறது புதியகாலனிய தாசர்களான மோடி கும்பல்.*

*எனவே, கொரோனாவிலிருந்தும், பஞ்சம், பசி, பட்டினி-யிலிருந்தும் மக்களைக் காக்க பொருளாதார வல்லுனர்கள் பரிந்துரைத்த ரூ.7 இலட்சம் கோடியை ஒதுக்கி மருத்துவப் பணிகளுக்கும், மக்கள் வாழ்வாதாரப் பிரச்சனைகளுக்கும் தீர்வு காணவேண்டும் என்று அரசை வற்புறுத்துவோம். இதற்கான நிதியை கார்ப்பரேட்டுகளுக்கு பல்லாண்டுகாலமாக இலட்சக்கணக்கான கோடிகளை வரிச்சலுகைகளாகவும், பிற சலுகைகளாகவும் அள்ளிக்கொடுத்த அரசு நன்கொடையாக அல்லாமல் பேரிடர் சிறப்பு வரி என்ற அடிப்படையில் கார்ப்பரேட்டுகளிடமிருந்து வசூலிக்கவேண்டும். ஓட்டாண்டிகளாகிக் கிடக்கும் மக்களிடம் நிதி கேட்பதும் ஒரு மோசடிச்செயலே.*

## கொரோனா தொற்றும் சுகாதாரக் கட்டமைப்பும்

*கொரோனா வைரசின் தாக்கத்தால் மிகக் கடுமையாக பாதித்த நாடு இத்தாலியாகும். இத்தாலிய மருத்துவமனைகளில் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு சிகிச்சையளிக்க போதுமான படுக்கைகள் இல்லை, அதனால்தான் பாதிக்கப்பட்டவர்கள் பலர் வீட்டிலேயே இருக்கும்படி கூறப்படுகிறார்கள். எந்த சிகிச்சையும் இல்லாமல் குணமடையக் காத்திருக்கவும் - அவர்கள் 90% மக்களில் ஒருவராக இருப்பார்கள் என்று நம்புகிறார்கள். இதற்கு காரணம் இத்தாலி அரசு கடைபிடித்த நவதாராளவாத கொள்கையால் கடந்த பத்து ஆண்டுகளில், இத்தாலியில் சுகாதாரத்துக்கான பொது நிதி சுமார் 37 பில்லியன் யூரோக்கள் குறைக்கப்பட்டுள்ளது. கடந்த பத்தாண்டுகளில் மட்டும் 359 மருத்துவமனைகள் மூடப்பட்டதுமாகும். இந்தியாவைக் காட்டிலும் பல மடங்கு வலுவாக மருத்துவக் கட்டமைப்பை வைத்திருக்கும் பிரிட்டன், ஜெர்மனி போன்ற நாடுகளே கொரோனாவின் பாய்ச்சலுக்கு முன்பு நடுங்குகின்றன. அதனால் தான் ஸ்பெயின் தனியார் மருத்துவமனைகள் அனைத்தையும் அரசுடமையாக்கியிருப்பது*

குறிப்பிடதக்கது. முழுவதும் தனியார்மயமாக்கப்பட்ட மருத்துவக் கட்டமைப்பை வைத்துள்ள அமெரிக்கா போன்ற நாடுகள் கொரோனா வைரஸ் தாக்குதலை எதிர் கொள்வதில் மிகவும் சிக்கலுக்கு உள்ளாகி இருப்பது கண்கூடாகத் தெரிகிறது.

இந்தியாவில், நவீன தாராளமயப் பொருளாதாரக் கட்டமைப்பைச் சுற்றி எழுப்பப்பட்டுள்ள சுகாதார அமைப்புகள் எந்த அளவிற்குப் போதாமையுடனும், பலவீனமாகவும் இருக்கின்றன என்பதை கொரோனா வைரஸ் தொற்று வெளிச்சத்திற்குக் கொண்டுவந்திருக்கிறது. உலகமயம், தனியார்மய, தாராளமயக் கொள்கைகள் இந்தியாவின் பொது சுகாதாரத் துறைக் கட்டமைப்பை சீர்குலைத்துள்ளது. பல ஆண்டுகளாகவே சுகாதாரத் துறைக்கான நிதி ஒதுக்கீடு போதிய அளவிற்கு ஒதுக்கப்படவில்லை. மொத்த உள்நாட்டு உற்பத்தியில் இரண்டு சதவீதத்திற்கும் குறைவாகவே சுகாதாரத்திற்காக செலவிடுகிறது. இது உலக நாடுகளுடன் ஒப்பிடும்போது மிகக் குறைவான விகிதமாகும்.

பொது சுகாதாரத்திற்கு மிகக் குறைந்த செலவினங்களைச் செய்யும் நாடுகளில் இந்தியாவும் ஒன்றாகும். குறைந்த வருமானம் கொண்ட நாடுகளான பூட்டான், இலங்கை மற்றும் நேபாளம் கூட முறையே மொத்த உள்நாட்டு உற்பத்தியில் 2.5 சதவீதம், 1.6 சதவீதம் மற்றும் 1.1 சதவீதம் தங்கள் மக்களின் ஆரோக்கியத்திற்காக செலவிடுகின்றன. ஆனால் இந்தியாவிலோ மொத்த உள்நாட்டு உற்பத்தியில் 1.02 சதவீதம் தான் சுகாதாரத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் ஒவ்வொரு இந்திய மக்களுக்கும் உள்ள பங்கு எவ்வளவு என்று பார்த்தால் ஒரு நபருக்கு ஒரு நாளைக்கு சுகாதார உத்தரவாதமுடன் வாழ வெறும் மூன்று ரூபாயை மட்டுமே செலவு செய்கிறது இந்த பாசிச மோடி அரசு. 2001 முதல் 2015 வரை மட்டுமே 0.38 மில்லியன் மக்கள் போதுமான சிகிச்சை வசதி இல்லாமல் தற்கொலை செய்து இறந்துள்ளனர்.

பலவீனமான சுகாதாரக் கட்டமைப்பை வைத்துள்ள இந்தியா எவ்வாறு கொரோனா போன்ற கொள்ளை நோய்களை எதிர்த்து போராடி மக்களை காக்க முடியும். பணம் இருந்தால்

மட்டுமே மருத்துவ சிகிச்சைகளைப் பெற்றுக் கொள்ள முடியும் என்ற ஒரு சூழலில் இந்தியாவில் வாழும் பெரும்பான்மையான ஏழை எளிய மக்களின் சுகாதாரம் ஒரு கேள்விக்குறியே? பாசிச மோடி கும்பலோ மக்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யாமல் மருத்துவத்துறையில் பன்னாட்டு, உள்நாட்டுப் கார்ப்பரேட்டுகள் கொள்ளையடிப்பதற்குத் திறந்துவிட்டு வேடிக்கை பார்க்கிறது.

எனவே இந்தியா போன்ற பின்தங்கிய வளார்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள மக்களுக்கு உயர்ந்தபட்ச மருத்துவம் என்பதற்கு முன்பாக மிகவும் அடிப்படையாகத் தேவைப்படக்கூடிய மருத்துவ வசதிகளை வழங்குவதற்கே போதுமான கட்டமைப்பு அரசிடம் இல்லை. பெரும்பாலும் முக்கியமான வசதிகள் தனியார் மருத்துவமனைகளிடமே உள்ள நிலையில் உடனடியாக அந்த மருத்துவமனைகளை அரசு தனது கட்டுப்பாட்டிற்குக் கொண்டுவந்து, அனைத்து வசதிகளும் மக்களுக்குப் பயன்படும் வகையில் செய்யவேண்டும். தேவையான அடிப்படை மருத்துவ வசதிகளை வழங்கிட வேண்டும் என்றாலும் அனைத்து தனியார் மருத்துவத் துறையும் அரசுடமையாக்க வேண்டியது மிக முக்கியமான கடமையாகும். இதை செய்தால் ஒழிய கொரோனா போன்ற கொள்ளை நோய்களை எதிர்த்துப் போராடுவது சாத்தியமற்றது என்பதை உலக நாடுகளின் அனுபவம் நிரூபித்துள்ளது.

மாநிலங்களைப் பொறுத்த அளவில், பாரதூரமான வேறுபாடுகள் நிலவுகின்றன. குறைந்தபட்சம் ஆயிரம் பேருக்கு ஒரு மருத்துவர் என்கிற உலக சுகாதார நிறுவனத்தின் இலக்கைக்கூட 2018 நிலவரப்படி இந்தியாவில் ஆறு மாநிலங்கள் மட்டுமே எட்டியுள்ளன. தமிழ்நாட்டில் 253 பேருக்கு ஒரு மருத்துவர் இருக்கிறார் என்றால், ஜார்க்கண்டில் 8,180 பேருக்கு ஒரு மருத்துவர்தான் இருக்கிறார். மருத்துவர்களின் எண்ணிக்கையிலேயே இப்படி என்றால், மருத்துவமனைகளின் உள்கட்டமைப்பு வசதியைப் பற்றி விவரிக்கவே வேண்டியதில்லை.

இந்தியாவின் மருத்துவ சுகாதாரக் கட்டமைப்புகள் கொரோனா வைரஸ் தொற்றை எதிர்கொள்வதற்கு

போதுமானது இல்லை என்பது அனைவரும் அறிந்த ஒன்றே. இதில் மிக முக்கியமானது உயிர் பாதுகாக்கும் கருவியான வென்டிலேட்டர் தட்டுப்பாட்டை எவ்வாறு பாசிச மோடி கும்பல் எதிர்கொள்ளப் போகிறது என்பது இதுவரையில் தெரியவில்லை. தற்போதுள்ள நிலைமையை பார்த்தால் இந்தியாவிற்கு குறைந்தபட்சம் நான்கு லட்சம் வென்டிலேட்டர்களாவது தேவைப்படும். இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்ட வென்டிலேட்டர் கருவிகளுக்கு அமெரிக்காவின் உணவு மற்றும் மருந்து நிர்வாகம் (The Food and Drug Administration (FDA or USFDA)) என்ற நிறுவனமும், ஐரோப்பிய யூனியனுடைய CE- Current Europeanயும் சான்றளித்தால் தான் வாங்குவோம் என்று மோடி கும்பல் கூறுகிறது. இத்தகைய மெத்தனப் போக்கு தற்போதுள்ள சூழலில் மக்கள் விரோத நடவடிக்கையாகும்.

இந்தியாவில் வென்டிலேட்டர் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள ஏழு உற்பத்தி நிறுவனங்களை அழைத்து, அதிக அளவில் வென்டிலேட்டர்களைத் தயாரிக்க சொல்வதுதான் உசிதமான வேலையாக இருக்கும். அதை விடுத்து இந்தத் துறைக்கு சம்பந்தமே இல்லாத மாருதி, மகேந்திரா, ஹூண்டாய் போன்ற கார் தயாரிக்கும் நிறுவனங்களை வென்டிலேட்டர் தயாரிக்க சொல்வது கமிஷனுக்கு ஆசைப்பட்டு மக்கள் உயிரைக் கொல்வதுதான். இது நடைமுறை சாத்தியமில்லாதது.

வென்டிலேட்டர் தயாரிப்பதற்குத் தேவையான சென்சார்கள், சிப்புகள் மற்றும் பல எலக்ட்ரானிக் உதிரி பாகங்கள் சீனாவில் இருந்து பெறப்படுகின்றன. தற்போது வெளிநாட்டு வர்த்தகப் போக்குவரத்து தடை செய்யப்பட்டுள்ளதால் உதிரிபாகங்கள் பெறுவதில் சிக்கல் உள்ளது. இந்திய அரசு சீன அரசுடன் பேச்சுவார்த்தை நடத்தி ஒரு தனி விமானத்தின் மூலம் கொண்டு வரமுடியும். அதை செய்யாமல் இங்குள்ள பன்னாட்டு, உள்நாட்டு கார் நிறுவனங்களை தயாரிப்பில் ஈடுபடுத்துவது என்பது ஊழலுக்கும், கார்ப்பரேட் கொள்ளைக்கும் வழிவகை செய்யுமே தவிர கொரோனா வைரஸ் நோய்த் தொற்றை எதிர்கொண்டு மக்களின் உயிரைக் காப்பதற்காக கிஞ்சித்தும் பயன்படாது என்பது தான் நிதர்சனமான உண்மையாகும்.

*கொரோனா வைரஸை பரிசோதிக்கும் கருவிகளைப் பொறுத்தவரை மிகவும் பின்தங்கியே உள்ளோம். இந்தியா முழுவதும் இதுவரையில் 120 பரிசோதனை மையங்கள்தான் அமைக்கப்பட்டுள்ளன. பாதிக்கப்பட்டுள்ள அல்லது சந்தேகிக்கப்படும் நபர்களில் வெறும் 10 சதவீதம் பேருக்கு மட்டுமே பரிசோதிக்க அனுமதிக்கப்படுகிறார்கள். இதற்கு அடிப்படைக் காரணம் பரிசோதனை உபகரணங்கள் போதாமையேயாகும்.*

*இந்த வைரஸ் நோயை எதிர்கொள்வதில் மருத்துவப் பணியாளர்களின் பங்கு முக்கியமானது. நோயைக் கண்டறிதல், நோயாளியைத் தனிமைப்படுத்துதல், சிகிச்சையளித்தல் போன்றவற்றினைக் கடைபிடித்து நோய் பரவுவதைத் தடுப்பதில் தென்கொரியாவும், சிங்கப்பூரும் வெற்றிகண்டதில் மருத்துவப் பணியாளர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். உலக சுகாதார நிறுவனமும் அதுவே சிறந்த வழி என்று உலகநாடுகள் இந்த நடைமுறையைப் பின்பற்றுவதின் மூலம் வேகமான நோய்த்தொற்றிலிருந்து காத்துக் கொள்ளமுடியும் என்று நெறிமுறையை வகுத்துத் தந்திருக்கிறது. இதைச் செயல்படுத்த வேண்டுமென்றால் மருத்துவப் பணியாளர்கள் அதிக எண்ணிக்கையில் தேவைப்படுவர். சீனாவில் 10,000 பேருக்கு 18 டாக்டர்களும், 23 நர்சுகளும் உள்ளனர். இத்தாலியில் 41 டாக்டர்களும், 59 நர்சுகளும் உள்ளனர். ஆனால், இந்தியாவில் 3.4 டாக்டர்களும், 3.2 நர்சுகளுமே உள்ளனர். அதுவும்கூட நகரப்பகுதிகளில்தான் அதிகமாக உள்ளனர். கிராமங்களின் நிலைமை இதைவிடவும் மோசம். டாக்டர்களும்கூட பீகாரில் 0.3 என்ற அளவிலும், கேரளாவில் 3.2 என்ற அளவிலுமாக மாநிலங்களுக்கிடையேயும் பெரிய வித்தியாசங்கள் நிலவுவதாக உள்ளது. இதற்கு மிக முக்கியக் காரணம் இந்திய ஆட்சியாளர்கள் கடைபிடித்த புதிய காலனிய நவதாராளக் கொள்கைகளேயாகும். இத்தகைய மருத்துவக் கட்டமைப்பின் ஊடாக இந்தக் கொள்ளை நோயை எவ்வாறு இந்திய அரசு எதிர்கொள்ளப் போகிறது என்பது கேள்விக்குறியாகவே உள்ளது.*

## தமிழகத்தில் மருத்துவ சுகாதார நிலைமைகள்

தமிழகம் முழுவதிலும் உள்ள அனைத்து அரசு மருத்துவமனைகளிலும் 13 ஆயிரம் தீவிர சிகிச்சை படுக்கைகளே (ICU Beds) உள்ளன. அதிலும் செயற்கை சுவாசக் கருவி (VENTILATORS) வசதி 3200 மட்டுமே உள்ளன. அவைகளில் பெரும்பாலானவை சென்னையில் மட்டுமே உள்ளன. இதர 37 மாவட்டங்களில் உள்ள அரசாங்க மருத்துவமனைகளில் 200க்கும் குறைவான செயற்கை சுவாச கருவிகளே உள்ளன. அவற்றில் எத்தனை கருவிகள் முழுமையாகச் செயல்படுகின்றன என்பது யாருக்கும் தெரியாது.

தமிழகத்தைப் பொறுத்தவரை தினம் 60 மாதிரிகள் என்ற விகிதத்தில் வாரம் 420 மாதிரிகள் பரிசோதிக்கப்படுகிறது. கிட்டத்தட்ட இதே அளவு மக்கள் தொகை கொண்ட பிரான்ஸ் நாடு வாரம் 10,000 சோதனைகளை மேற்கொள்ளுகிறது. இத்துடன் நமது பரிசோதனையை ஒப்பிட்டால் இது வெறும் 4.2% ஆகும்.

தமிழகத்தில் உள்ள அனைத்து தீவிர சிகிச்சைப் பிரிவுகளிலும் எம்.டி. பொது மருத்துவர்களே பணியமர்த்தப்பட்டுள்ளனர். சில அரசு மருத்துவமனைகளில் மயக்கவியல்துறை வல்லுநர்களும் தீவிர சிகிச்சைப் பிரிவில் பணியாற்றுகின்றனர். அனைத்து அரசு மருத்துவக் கல்லூரி மருத்துவமனைகளிலும் முதுநிலை மாணவர்கள் (PG Residents) தான் தீவிர சிகிச்சைப் பிரிவில் முதுகெலும்பாக இருக்கின்றனர். இவர்கள் அனைவரும் சிறப்பாகச் செயல்பட்டாலும் கூட இந்நேரத்தில் தீவிர சிகிச்சைப் பிரிவு சிறப்பு வல்லுநர்களின் (CRITICAL CARE SPECIALISTS/DM PULMONOLOGIST) வழிகாட்டுதல் நிச்சயம் தேவை. தமிழக அரசு மருத்துவமனைகளில் தீவிர சிகிச்சைப் பிரிவு சிறப்பு வல்லுநர்கள் (CRITICAL CARE INTENSIVIST) ஒருவர் கூட இல்லை. 175 ஆண்டுகள் பழமை வாய்ந்த சென்னை பொது மருத்துவமனையில் கூட அத்துறை வல்லுநர்கள் யாரும் இல்லை.

கொரோனாவால் பாதிக்கப்பட்ட நபர் தனிமைப்படுத்தப் பட்டு, எதிர்மறை அழுத்தம் (Negative pressure Isolation Room) உள்ள அறைகளில் தங்க வைக்கப்பட வேண்டும். குறிப்பாக தீவிர

சிகிச்சை பிரிவுகளில் உள்ளவர்கள் மற்றும் செயற்கை சுவாசம் பொருத்தப்பட்டவர்கள் அனைவரும் எதிர்மறை அழுத்தம் உள்ள அறைகளில் இருந்தால்தான் நோய் பரவல் குறையும். அப்படிப்பட்ட வசதி எந்த அரசு மருத்துவமனைகளிலும் தற்போது இல்லை. இதனால் பாதிக்கப்பட்ட நபரிடமிருந்து அந்த நோய் மருத்துவர்களுக்கும் செவிலியர்களுக்கும் பரவும் அபாயம் உள்ளது. ஸ்பெயின் நாட்டில் இதுதான் நடந்தது. அங்கு கொரோனா நோயால் பாதிக்கப்பட்ட நபர்களில் 15% மருத்துவப் பணியாளர்கள். நம் நாட்டில் இதுபோன்ற நிலைமை ஏற்பட்டால் 30 முதல் 40% மருத்துவர்கள் மற்றும் செவிலியர்கள் பாதிக்கப்படுவார்கள்.

அதுமட்டுமல்ல பல்வேறு மருத்துவமனைகளில் போதுமான அளவுக்கு பாதுகாப்பு உபகரணங்கள் இல்லாமல் மருத்துவர்களும், செவிலியர்களும் பெரும் பிரச்சனைக்கும் தொற்று ஏற்படும் அபாயத்துக்கும் உள்ளாக்கப்பட்டுள்ளார்கள். இதைப் போக்க வேண்டுமென்றால் உடனடியாக மருத்துவ உபகரணங்களை போர்க்கால அடிப்படையில் தயாரித்து வழங்க வேண்டியது அரசின் கடமையாகும். தற்போது ஒரு மாத காலமாகியும் இதுவரையில் இந்த ஆட்சியாளர்கள் இதை நிவர்த்தி செய்யக்கூட வக்கற்றுப் போய் நிற்கின்றனர். புதிய காலனிய நவதாராளவாத, உலகமய, தனியார்மயக் கொள்கைகள் மக்களின் வாழ்வாதாரத்தையும் சுகாதாரத்தையும்பற்றி எள் முனை அளவு கூட கவலைப்படாது என்பதை நிருபித்துள்ளது. எனவே உயர் சிகிச்சை தேவைப்படும் அனைத்து கொரோனா நோயாளிகளையும் எவ்வித தாமதமும் இன்றி, அனைத்து வசதிகளையும் (ECMO உட்பட) கொண்டுள்ள தனியார் மருத்துவமனைகளை உடனடியாக அரசின் கட்டுப்பாட்டில் கொண்டுவந்து நோயாளிகளுக்கு 24 மணிநேர தீவிர சிகிச்சைப் பிரிவு வல்லுனர்களின் கண்காணிப்பில் முறையான சிகிச்சை அளித்திட வேண்டும்.

### உலகமயம் சீரழித்த சுகாதாரம் மற்றும் மருத்துவ சேவைகள்

ஏகாதிபத்தியவாதிகளும் தரகு முதலாளித்துவ கும்பலும் தாராளமய, தனியார்மய, உலகமயக் கொள்கைகளை அமல்படுத்தி வாழ்வின் அனைத்துத் துறைகளையும்

தனியார்மயமாக்கியது. அதில் கல்வி, மருத்துவம், சுகாதாரமும் கூட தப்பவில்லை. மருத்துவம் ஒரு சேவை என்பதை மறுத்து அதை தனியார் இலாபம் கொழிக்கும் தொழிலாக மாற்றியது. கார்ப்பரேட்டுகள் மருத்துவமனைகளையும், மருத்துவக் கல்லூரிகளையும், ஆராய்ச்சி நிறுவனங்களையும் கைப்பற்றின. அரசின் கட்டுப்பாடுகள் அனைத்தும் பெயரளவிற்கானதாக மாற்றப்பட்டுவிட்டது. மக்களுக்கான மருத்துவச் செலவு, இன்சூரன்சு என்ற ஏகபோக நிதிமூலதன கும்பல்களின் கைக்கு மாற்றப்பட்டது. மக்களுக்கு சிறப்பான மருத்துவம் வழங்குவதாகக் கூறி அரசாங்கம் மருத்துவத்திற்காக ஒதுக்கும் நிதியில் பெரும்பகுதியை இந்த இன்சூரன்சு நிறுவனங்களும், கார்ப்பரேட் மருத்துவமனை முதலாளிகளுமே பங்குபோட்டுக் கொள்கின்றனர்.

கியூபா போன்ற நாடுகளில் மருத்துவ அறிவியல் சம்பந்தமான விஷயங்களில் நல்ல மார்க் பெறுவதால் மட்டும் எவரும் மருத்துவம் படிக்க முடியாது. அதற்கு மாணவர்களுக்கு இருக்க வேண்டிய தகுதியை முதலில் தீர்மானிக்க வேண்டியவர்கள் மாணவர்களது நண்பர்களும் ஆசிரியருமாவர். மருத்துவச் சேவையில் உங்களிடம் அர்ப்பணிப்பு உணர்வு உள்ளதென்பதை நண்பர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் உணர்த்துவதுடன், அவர்கள் உங்களை மருத்துவப் படிப்புக்காகப் பரிந்துரைக்கவேண்டும். சுருக்கமாகச் சொல்வதென்றால், மருத்துவச் சேவைக்கான மிகவும் முதலாவது தகுதியாக இருப்பது கியூபாவைப் பொறுத்தவரை சேவைக்குத் தேவையான அர்ப்பணிப்பு உள்ளமாகும். ஆனால் இந்தியாவில் மருத்துவக் கல்வியில் நீட்தேர்வு போன்றமுறைகளைப் புகுத்தி சேவை மனப்பான்மை கொண்ட சமூகத்தின் பல்வேறு தரப்பினரையும் ஒதுக்கிவைத்துவிட்டு, கோடிக்கணக்கில் பணம் செலவழித்தால்தான் படிக்கமுடியும் என்று பணம் உள்ளவர்களுக்கான படிப்பாக மட்டுமே மாற்றப்பட்டுவிட்டது.

இத்தகைய சூழலில் கொள்ளை நோயான கொரோனா வைரஸ் தாக்குதலை எதிர்கொள்ள முடியாமல் உலகநாடுகள் தவித்துக் கொண்டிருக்கின்றன. இந்த பாதிப்பு அதிகமாக

உள்ள நாடுகளான சீனா, இத்தாலி, ஸ்பெயின், ஈரான், மற்றும் பிற ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் இந்த நோயைக் கட்டுப்படுத்துவதற்கான நடவடிக்கைகளைக் கணக்கில் கொண்டால் 80% மருத்துவமனைகளை அரசின் கட்டுப்பாட்டில் வைத்துள்ள சீன அரசு ஒரு பெரும் பேரழிவைத் தடுப்பதில் வெற்றி கண்டுள்ளது என்பதைக் காணமுடிகிறது. தனிநபர் ஒருவருக்கு சீனாவின் மருத்துவச் செலவு 426 டாலர் என்ற அளவில் இருந்தபோதும் சீனாவால் இதை சாதிக்க முடிந்திருக்கிறது. இதை ஒப்பிடுகையில் தனிநபர் ஒருவருக்கான மருத்துவச் செலவு இத்தாலியில் 2700 டாலர், ஸ்பெயின் 2354 டாலர், பிரிட்டன் 4356 டாலர், ஜெர்மனி 4592 டாலர், அமெரிக்கா 9536 டாலர் என செலவு செய்தாலும் அவற்றின் மருத்துவக் கட்டமைப்புகள் அனைத்தும் தனியார்வசம் இருப்பதால் அவசரகாலத்தில் அது மக்களுக்குப் பயன்படும் நிலையில் இல்லாததால் அந்த அரசுகள் இன்று பல்லாயிரக்கணக்கான மக்களைப் பலிகொடுத்தும், அதைக் கட்டுப்படுத்துவதற்கான வழிதெரியாமலும் சிக்கித் திணறி வருகின்றன. முழுமையாக மருத்துவத்தை தனியார்மயப் படுத்தியிருக்கும் அமெரிக்கா இன்று ட்ரம்ப்பின் வாய்ச்சவடால்களையும் மீறி உலகின் அதிகமான தொற்றுக்கு ஆளானோரின் நாடாகவும் இறப்புவிகிதம் நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டிருப்பதையும் காணமுடிகிறது.

## சந்தியில் நிற்கும் முதலாளித்துவம்

உலகளாவிய கொரோனா நோய்ப் பேரிடரின் விளைவுகளை எதிர் கொள்வதற்கான வழிமுறைகள் முதலாளித்துவத்திடம் இல்லை என்பதையே சமீபத்திய நிகழ்வுகள் காட்டுகின்றன. உலகமயமாக்கல் என்பது, கொரோனா வைரசையும் உலக அளவில் வேகமாகப் பரப்பி, அதனால் ஏற்படும் நோயையும் உலகளாவிய ஒன்றாக எழும் நிலையையும் உருவாக்கியுள்ளது. மார்ச் 27 ஆம் தேதி ஆன் லைன் மூலம் உரையாற்றிய சர்வதேச நாணய நிதியத்தின் தலைவர் கிறிஸ்டலினா ஜார்ஜீவா, "கொரோனா வைரஸ் தொற்று உலகப் பொருளாதாரத்தை வீழ்ச்சியடையச் செய்துள்ளது, இது வளரும் நாடுகளுக்கு மிகப் பெரிய நிதித் தேவையை ஏற்படுத்தும். 2008ஆம் ஆண்டு

ஏற்பட்ட உலகளாவிய நிதி நெருக்கடியைத் தொடர்ந்து 2009ஆம் ஆண்டு ஏற்பட்ட நிலையை விட இனி வரும் காலங்கள் மோசமாக இருக்கும். உலகமே பொருளாதார மந்தநிலைக்குள் நுழைந்துள்ளது என்பது தெளிவாகிறது" என்று கூறினார். இத்தகைய நிலைமை ஏழை எளிய மக்களின் வாழ்க்கையை கடுமையாக பாதிக்கப்போகிறது. இதை எதிர்கொள்வதற்கான நிதியை பன்னாட்டு உள்நாட்டு கார்ப்பரேட்டு நிறுவனங்களிடம் சிறப்பு வரிகள் மூலம் வசூலிக்க வேண்டும். மிகு உற்பத்தி நெருக்கடி ஏற்கனவே பொருளாதாரத்தை மந்தப்படுத்தி உள்நாட்டு நெருக்கடியைத் தோற்றுவித்தபோது அமெரிக்கா, பிரிட்டன் போன்ற ஏகபோக நாடுகள் உலகமயக் கொள்கையை ஒதுக்கிவைத்து காப்புக் கொள்கை என்று பேசி தங்கள் நாடுகளுக்கு பாதுகாப்பையும், புதியகாலனிய நாடுகளுக்கு சுரண்டலையும் தீர்வாக முன்வைத்து வருகின்றன.

ஏகாதிபத்திய உலகமயக் கொள்கை முடைநாற்றமெடுத்து உலகத்தின் நாசிகளைத் தொட்டு அம்பலப்பட்டுவரும் வேளையில்தான் இந்தக் கொரோனா வந்து சேர்ந்திருக்கிறது. இப்போது ஒவ்வொரு நாடும் தனது எல்லைகளை மட்டும் மூடவில்லை. நாட்டுக்குள்ளேயே மாகாண எல்லைகளையும் மூடவைக்கிறது. முதலாளித்துவம் தனது நெருக்கடிகள் யாவற்றையும் கொரோனா மீது போட்டுவிட்டு மீண்டும் எந்தவகையில் சுரண்டலாம் என்று கணக்குப் போடுகிறது. அதன் ஒருபகுதியாகவே பங்குச்சந்தை கொள்ளையடிப்பும் நிகழ்ந்து வருகிறது. ஒரு பிரச்சனை என்றவுடன் பின்னங்கால் பிடரியில் பட ஓடிப்போகும் இந்த சந்தை மூலதனம்தான் வளர்ச்சியின் அறிகுறி என்று மக்களை ஏமாற்றிக் கொண்டிருந்தனர் இந்தப் பாசிஸ்டுகள். ஊகமூலதனத்தின் உண்மைமுகத்தை மக்கள் புரிந்துகொள்ள இதுவே சிறந்த தருணம்.

### வேலையின்மை என்கிற தொற்றுநோய்

முதலாளித்துவம் நெருக்கடிகளை தன்னுள்ளே எப்போதும் அடைகாத்து வைத்திருக்கும். அதற்கு ஒரே அடிப்படை அதன் சுரண்டலை அடிப்படையாகக் கொண்ட உற்பத்திமுறைதான். முதலாளித்துவ சமூக அமைப்பில் நெருக்கடியின் சாத்தியம்

எப்போதும் இருக்கும், ஆனால் காரணங்கள் மற்றும் தூண்டுதல்கள் அனைத்தும் குறிப்பான வரலாற்றுச் சூழலுக்கு ஏற்ப மாறுபட்டவையாக உள்ளன.

சில நேரங்களில், முதலாளித்துவத்தின் நெருக்கடிகள் தொழிலாளர்களிடமிருந்து அதிக உபரியைப் பெறுவதில் உள்ள சிரமங்களிலிருந்தும், அதன் விளைவாக பெருநிறுவன இலாப விகிதங்களின் வீழ்ச்சியிலிருந்தும் உருவாகின்றன. மற்ற நேரங்களில், அவை ஊக குமிழ்கள் (speculative bubbles) வெடிப்பதன் மூலமும், நிதித்துறையில் உள்ள நிதியை இயக்குவதாலும் ஏற்படுகின்றன. இந்த நேரத்தில், பல நிறுவனங்கள் மலிவான பணத்தை நம்பியிருந்தன, எதிர்பாராத ஒரு "அதிர்ச்சி" ஏற்பட்டால் அதாவது நோவல் கொரோனா வைரஸ் தொற்றுநோய் போன்ற பிரச்சினைகள் வரும்போது நெருக்கடிகள் மிகவும் அதிகமாகவும் சிக்கலானதாகவும் மாறுகிறது. ஆனால் முதலாளித்துவ நெருக்கடிகள் அனைத்திற்கும் பொதுவான ஒன்று உள்ளது. அதுதான் மிகை உற்பத்திக்கான நெருக்கடி. உற்பத்தி சமூகமயமாவதும், சுவீகரிப்பு தனியார்மயமாவதும் அதனால் மக்களின் வாங்கும் சக்தி வீழ்ச்சியடைந்து சந்தைகள் வீழ்வதும் தவிர்க்கமுடியாததாக மாறுகிறது. இதன் ஒட்டுமொத்த வெளிப்பாடுதான் வேலையின்மையாகும். இதுதான் மனித குலத்தை அச்சுறுத்தும் மிகப்பெரும் வைரஸ் கிருமியாகும். இதற்கு தீர்வு இல்லாவிட்டால் பல்வேறு வைரஸ் தொற்றுநோய்களிடமிருந்தும் குறிப்பாக கொரோன கொள்ளை நோயிடமிருந்து மக்களை காப்பது அசாத்தியம்.

ஏனென்றால், முதலாளித்துவத்தின் கீழ், தொழிலாளர்களுக்கு வேலைக்கு உத்தரவாதம் இல்லை. வேலைகள் எப்போது, எங்கு உருவாக்கப்படும் அல்லது அழிக்கப்படும் என்பது குறித்த முடிவுகளில் பங்கேற்க தொழிலாளர்களுக்கு உரிமை கிடையாது. அதற்கு பதிலாக, அவர்கள் வேலை செய்யும் திறனை விற்க முயற்சிக்க அவர்கள் கடுமையாக உழைக்க வேண்டும். மேலும் அவர்கள் உயிர்வாழ அவ்வாறு செய்ய வேண்டிய கட்டாயத்தில் உள்ளனர். ஏனென்றால் உழைப்பைச் செலுத்துவதற்கான அவர்களின் திறன் சந்தையில்

மதிப்புமிக்கது, அது முதலாளிகளுக்கு லாபம் ஈட்ட பயன்படும் போது மட்டுமே.

இப்போது, கொரோனா வைரஸ் தொற்றுநோய்க்கு மத்தியில், உலக முழுவதும் உள்ள தொழிலாளர்கள் தங்களின் உற்பத்தி மற்றும் வணிக நடவடிக்கைகளில் இருந்து விரட்டப்பட்டு இருக்கிறார்கள். சீனாவில் 5 மில்லியன் தொழிலாளர்கள் வேலை இழந்திருக்கிறார்கள். உலகம் முழுவதும் இதே நிலைதான். இப்போது நாம் எதிர்கொள்வது வேலையின்மை என்கிறத் தொற்றுநோய்தான் இன்று உலகத்தை ஆட்டி படைத்துக்கொண்டிருக்கிறது.

இந்தியாவில் பொருளாதார நடவடிக்கைகள் பல துறைகளிலும், குறிப்பாக போக்குவரத்து, சுற்றுலா, எண்ணெய்த் துறை, சேவைத் துறைகள் போன்ற அனைத்தும் முடங்கிவிட்டது. விநியோகச் சங்கிலிகள் (Supply Chain) சீர்குலைந்திருக்கின்றன. உற்பத்திச் சங்கிலிகளும் (Production Chain) உலகம் முழுதும் உடைந்து கிடக்கின்றன. இது நேரடியாக உற்பத்தி, வர்த்தகம் மற்றும் முதலீடுகளை மிகக் கடுமையாக பாதித்துள்ளது. பங்குச் சந்தைகள் சரிந்திருக்கின்றன. நவீன தாராளமயப் பொருளாதாரக் கொள்கையால் ஊக்குவிக்கப்பட்ட பங்குச்சந்தை ஏற்றம் இப்போது சரிந்துவிட்டது. நிதிச் சந்தையில் ஏற்பட்டுள்ள செங்குத்தான வீழ்ச்சி உண்மையான பொருளாதாரத்தைப் பாதித்து, பொருளாதார மந்தத்தை ஆழமாக்கி இருக்கிறது. கார்ப்பரேட்டுகளின் கடன்கள் மிகப்பெரிய அளவில் இருக்கக்கூடிய நிலையில், இந்த நிலைமை நிதிச் சந்தையிலும் தொற்றுநோய் போல் பரவிடும். இதனைத் தொடர்ந்து ஏற்படக்கூடிய நிலைகுலைவுக்கான அச்சுறுத்தல் அநேகமாக 2008ஐவிட பெரிய அளவில் இருந்திடும். தற்போது இந்தியாவின் வேலையின்மை விகிதம் 2020 பிப்ரவரியில் 7.78% ஆக உயர்ந்துள்ளது. கொரோனா பாதிப்பால் அமல்படுத்தப்பட்டுள்ள ஊரடங்கு பல்வேறு தளங்களிலும் பாதிப்பை ஏற்படுத்தி வருகிறது. குறிப்பாக கொரோனா தாக்கத்தால் பல லட்சம் பேர் வேலையிழக்கும் அபாயமும் ஏற்பட்டுள்ளது.

இந்தியாவில் ஊரடங்கின் காரணமாக ஏற்பட்ட தேவைக் குறைவு மற்றும் விநியோகம் செய்வதில் உள்ள தடைகள் காரணமாக பொருளாதார மந்தநிலையால் புதிய வேலைவாய்ப்புகள் இல்லாமல் போவது மட்டுமல்லாமல், தற்போது பணிபுரியும் நபர்களையும் அது பாதிக்கிறது. இந்தியாவில், கொரோனா வைரஸ் பேரிடர் பாதிப்பினால் மட்டும் சுமார் 13.6 கோடி தொழிலாளர்களின் வேலைவாய்ப்பு பறிபோகப் போகிறது. ஜவுளி, மூலதனப் பொருட்கள், சிமெண்ட், உணவுப் பொருட்கள், உலோகம், ரப்பர், பிளாஸ்டிக் மற்றும் எலக்ட்ரானிக்ஸ் உள்ளிட்ட உற்பத்திப் பிரிவுகளில் சுமார் 90 லட்சம் வேலைவாய்ப்புகளை இழக்க நேரிடலாம் என்று கூறுகிறது. ஆட்டோமொபைல் துறையில் ஒரு மில்லியன் வேலைவாய்ப்புகளை இழக்கக்கூடும் என்று அடெக்கோ மதிப்பிட்டுள்ளது. விமானத் துறையில் 60,000 பேர் வேலையிழப்பை சந்திக்கக்கூடும்.

உற்பத்தித் துறைகளில் 2.8 கோடி தொழிலாளர்கள் எழுத்துப்பூர்வமான ஒப்பந்தம் இல்லாமல் பணிபுரிகிறார்கள். 4.9 கோடி பேர் உற்பத்தி சாராத துறைகளில் பணிபுரிகிறார்கள். மற்ற துறைகளில் 5.9 கோடி பேர் வரை 2017-18ஆம் ஆண்டிலிருந்து பணிபுரிகிறார்கள். ஒட்டுமொத்தமாக இந்தியாவில் சுமார் 13.6 கோடி தொழிலாளர்கள் கொரோனா வைரஸ் பேரிடர் பாதிப்பு இவர்களின் வேலைவாய்ப்பு பறிபோகப்போகிறது. தற்போது கொரோனா வைரஸ் தொற்றுநோயால் பிறப்பிக்கப்பட்டுள்ள ஊரடங்கு உத்தரவு வேலையின்மையை மிகவும் அதிகரித்துள்ளது. புதிய காலனிய வேளாண் கொள்கைகளின் விளைவாக விவசாயிகள் விவசாயத்தைவிட்டு வெளியேறுவதும் தற்கொலைகளும் அதிகரித்து வருகின்றன. நாளொன்றுக்கு சராசரியாக சுமார் 6700 பேர் விவசாயத்தைவிட்டு வெளியேறி வருகின்றனர். மறுபுறம், விவசாயிகளின் தற்கொலைகளும் ஆண்டுக்காண்டு பெருகிவருகிறது. 1995 முதல் இன்று வரையில் 4 இலட்சத்திற்கும் அதிகமான விவசாயிகள் தற்கொலை செய்துகொண்டுள்ளனர். ஆண்டிற்கு சராசரியாக 16ஆயிரத்து 70பேர் மாண்டுள்ளனர். ஏற்கெனவே கடுமையான

நெருக்கடிக்கு உள்ளாகியுள்ள விவசாயிகள் தற்போது கொரோனா பேரிடரினால் முடக்கப்பட்டுள்ளனர். அறுவடை செய்ய முடியாமலும், அப்படியே செய்தாலும் சந்தைப்படுத்த முடியாமலும் பெரும் துயரத்திற்கு ஆளாகியுள்ளனர். விவசாயக் கூலிகளின் நிலையோ மூன்று வேளை சரியான உணவுகூட இல்லாமல் அவதிப்படுகின்றனர். **மக்களின் அடிப்படை வாழ்வாதாரத்தை உத்திரவாதம் செய்யாமல், உணவு இல்லாமல் 21 நாட்களுக்கு ஏழைகளை பூட்டுவது என்பது கொரோனா வைரஸில் இருந்து மக்களைப் பாதுகாப்பது அல்ல, மாறாக பட்டினி என்ற வைரஸால் மக்களை கொல்வதுதான்.**

உலக சுகாதார நிறுவனம் அறிவித்துள்ளபடி கரோனா வைரஸ் தாக்குதலை எதிர்கொள்வது எப்படி என்பதை சீனா மற்றும் தென் கொரியா எவ்வாறு இந்த வைரஸ் தாக்குதலை கட்டுக்குள் கொண்டு வந்தது என்பதை படிப்பினையாக எடுத்துக் கொண்டு அதிலிருந்து வெற்றி கொள்வதற்கான வழி முறையாக இவ்வாறு குறிப்பிடுகிறது: “நோயாளிகளைக் கண்டறிவது, பரிசோதிப்பது, நோய்க்கான சிகிச்சை அளிப்பது (Trace, Test, Treat) என்ற முறையே சிறந்த முறையாகும்.” அதை விடுத்து மக்களை ஊரடங்கு என்ற வைத்தியம் மூலம் அடக்கி விடுவதாலேயே வைரஸை எதிர்கொண்டு விடலாம் என்று சொல்வது மிகவும் அயோக்கியத்தனமான பித்தலாட்டமான கருத்தாகும்.

சமூக இடைவெளி (Social Distancing) என்பது நோய்த் தொற்றை பரவாமல் தடுக்க மிகவும் தேவையான செயல்பாடுதான். ஆனால், இந்தியா போன்ற நாட்டில் ஒரே பத்துக்குப் பத்து அறையில் பத்துபேர் உண்டு உறங்கும் ஒரு நாட்டில் சமூக இடைவெளியை எவ்வாறு நடைமுறையில் கடைபிடிக்க முடியும். அதற்கு இந்த அரசு அவர்களுக்கான வாழிடங்களை உத்தரவாதம் செய்திருக்கிறதா? இந்தியாவில் மட்டும் சுமார் 8 கோடிக்கும் மேலானவர்கள் வீடற்றவர்களாக இருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது வெறும் ஊரடங்கு மட்டுமே கொரோனா பேரிடரை எதிர்கொள்வதற்கு தீர்வை வழங்காது.

நோயை எதிர்கொண்டு போராட வேண்டும் என்று சொன்னால் இந்த நோயின் தன்மையிலேயே அதற்கான

அடிப்படைகள் அமைந்திருக்கின்றன. கொரோனா வைரசால் பாதிக்கப்பட்டவர்கள் கிட்டத்தட்ட 85 சதவீதம் பேர் தங்களுக்கு அந்த நோய்த் தொற்று இருப்பதை அறியாமலேயே குணம் அடைந்து விடுகின்றனர். 15 சதவீத மக்களுக்குத்தான் மருத்துவரின் உதவி தேவைப்படுகிறது என்று உலக சுகாதார நிறுவனம் கூறியுள்ளது. அந்த 15% மக்கள் மட்டும் ஏன் அந்த நோயால் மிகவும் கடுமையாக பாதிப்படைகிறார்கள் என்று ஆராய்ந்தால் மிகவும் பலவீனமானவர்கள், ஊட்டச்சத்து குறைபாடு உள்ளவர்கள், நோய் எதிர்ப்பாற்றல் குறைபாடுள்ளவர்கள், பல்வேறு நோய்களை உடையவர்கள் போன்ற நபர்களுக்கு தான் இந்த கொரோனா வைரஸ் கடுமையான பாதிப்புகள் உருவாகிறது.

இந்தியா போன்ற நாட்டில் 30 சதவீதத்துக்கும் மேற்பட்டோர் ஊட்டச்சத்துக் குறைபாடுகள் உள்ளவர்கள் என்று சுகாதாரத்துறை தெரிவித்துள்ளது. அப்படி இருக்க 21 நாட்கள் ஊரடங்கு உத்தரவு பிறப்பிப்பதை மட்டுமே செய்துவிட்டு அவர்களுக்கு எவ்விதமான உயிர் வாழ்வதற்கான உணவு, உடை போன்ற அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்யாமல் இருப்பதென்பது, பெரும்பான்மை மக்களுக்கு ஏழை, எளிய மக்களுக்கு தொற்று அதிகரித்து, நோய் எதிர்ப்பாற்றல் அற்றவர்களாக மாற்றம் செய்யுமே ஒழிய கொரோனா வைரஸை எதிர்த்துப் போராடுவதற்கு சிறிதும் பயன்படாது.

இந்தியாவைப் பொருத்தவரையில் 95% பேர் ஏதும் அற்றவர்களாகவும் 5 சதவீதம் பேர் மட்டுமே மொத்த செல்வத்தில் 75 சதவீதத்தை தன்னகத்தே பெற்றவர்களாகவும் இருக்கும் ஒரு சூழலில், இந்த ஏற்றத்தாழ்வு எந்த அளவுக்கு அதிகரித்துள்ளதோ அந்த அளவுக்கு கொரோனா போன்ற உயிர்க்கொல்லி நோயை எதிர்த்துப் போராடுவதற்கு மிகப்பெரும் தடையாக இருக்கிறது.

கொரோனா வைரஸ் தாக்குதல் நமக்கு உணர்த்துவது என்னவென்றால், மக்களுக்கும் மூலதனத்திற்கும் உள்ள முரண்பாடு கூர்மை அடைந்திருக்கிறது. அதே சமயத்தில் ஏகாதிபத்தியங்களுக்கிடையே கடுமையான முரண்பாடுகளை

தோற்றுவித்திருக்கிறது. இந்த முரண்பாடுகளுக்குத் தீர்வுகாணாமல் மருந்தைக் கொண்டுவருவது கூட ஏகபோக நலன்களை பாதுகாத்து ஏழை, எளிய மக்களை கொள்ளையடிப்பதற்கே பயன்படும். ஏற்றத்தாழ்வை ஒழித்துக் கட்டாமல் மக்களை சுரண்டலிலிருந்து விடுதலை செய்யாமல் கொரோனா போன்ற தொற்று நோய்களிலிருந்து மக்களை காப்பது கடினம்.

## நோயும் நோய்க்கான மருந்தும்

கொரோனா வைரஸில் இது புதுவகை என்பதால் பழைய மருந்துகளைப் பயன்படுத்த முடியாது என்றும், புதிய மருந்துதான் கண்டுபிடிக்கப்பட வேண்டும் என்றும் முன்னதாகக் கூறப்பட்டது. அதற்கான புதிய மருந்து கண்டுபிடிப்புக்கான ஆராய்ச்சியில் சீனா, அமெரிக்கா, கியூபா, ஜெர்மன் போன்ற நாடுகள் இறங்கியிருக்கின்றன. அதற்குள்ளாக ஏற்கனவே மலேரியா நோய்க்காகப் பயன்படுத்தப்பட்ட குளோரோக்குயினுடன் எரித்ரோமைசின் என்ற மருந்தையும் சேர்த்து வழங்குவதின் மூலம் ஆரம்பகட்ட நோயாளிகளை நோயிலிருந்து விடுவிக்கமுடியும் என்று மருத்துவர்கள் களநிலவரத்தை அறிவித்த உடனேயே அந்த மருந்துகளின் விலையை இரண்டு மடங்காக உயர்த்தியது அமெரிக்க நிறுவனம். உலக சுகாதார நிறுவனமோ இது இந்த நோய்க்கான மருந்தல்ல. இதை அங்கீகரிக்க முடியாது என்று அதை ஏற்க மறுத்துள்ளது. ஏற்கனவே மலேரியா, எய்ட்ஸ், காசநோய் போன்றவற்றிற்கு பயன்படுத்தப்பட்ட 30 ற்கும் மேற்பட்ட மருந்துகளை மேம்படுத்துவதின் மூலம் இந்த நோய்க்கான மருந்தை விரைந்து உருவாக்க முடியும் என்று மருத்துவர்கள் கூறிவருகிறார்கள்.

கியூபாவும், சீனாவும் வேறு மருந்தைப் பயன்படுத்துவதுடன் மலிவாகவும் விற்பனை செய்கின்றன. இத்தாலி, வெனிசுலா போன்ற நாடுகளுக்கு அந்த மருந்துகள் அனுப்பப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இந்திய பிரதமர் மோடியோ மலிவான கியுபாவின் மருந்துகளைப் பெறுவதில் அக்கறை காட்டாமல், ட்ரம்ப் அறிவித்த அடுத்த நாளே இந்திய மருத்துவக் கவுன்சில் மூலமாக குளோரோக்குயினையும், எரித்ரோமைசினையும்

பயன்படுத்த மருத்துவர்களுக்குப் பரிந்துரைக்கிறார். ஆனால், அது கடுமையான பக்கவிளைவுகளை ஏற்படுத்தக் கூடியது என்று மருத்துவர்கள் அஞ்சுகிறார்கள். இப்படியான சூழலில்தான் சமூகவிலக்கம் மூலமே நோய்த்தொற்றின் பரவலைத் தடுக்கமுடியும் என்று எல்லா நாடுகளும் உற்பத்தியை நிறுத்திவைத்து மக்களை வீடுகளுக்குள் பூட்ட நினைக்கின்றன. இது மக்களின் உயிரைக் காக்கவா? முதலாளித்துவ மிகை உற்பத்தியின் நெருக்கடியைத் தீர்க்கவா? என்ற கேள்விகளும் எழுப்பப்படுகின்றன.

### புதிய தடுப்பு மருந்தும், ஏகாதிபத்திய திட்டமும்

உலகப் பொருளாதார அமைப்பும்(World Economic Forum), பில்கேட்சின் அறக்கட்டளையும் இணைந்து நிதிவழங்கும் CEPI (Coalition for Epidemic Prepardness Innovations) என்ற நிறுவனத்தின் வாயிலாக பல்வேறு தனியார் நிறுவனங்களுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு mRNA 1273 என்கிற கொரோனாவுக்கான தடுப்பு மருந்தை சந்தைக்குக் கொண்டுவர முயற்சிக்கின்றனர். இதில் கியூர்வேக்(CureVac) என்கிற ஜெர்மன் மருந்துக் கம்பெனியும் இணைந்திருக்கிறது. அந்த நிறுவனத்தை அமெரிக்க அதிபர் ட்ரம்ப் தனக்காக வாங்க முயற்சித்ததைக் கண்டித்து ஐரோப்பிய யூனியன் 80 மில்லியன் யூரோவை அந்த நிறுவனத்திற்கு நிதி உதவி அளித்திருக்கிறது. இந்த மருந்து தனி ஒரு நாட்டிடம் செல்வதை தாங்கள் விரும்பவில்லை என்று ஐரோப்பிய யூனியனும், ஜெர்மனியும் கூறியுள்ளது. உண்மையில் அமெரிக்காவிற்கோ, ஐரோப்பிய யூனியனுக்கோ பொதுப் பயன்பாட்டிற்கானது என்ற அக்கறையைவிட, G7 நாடுகளின் திட்டப்படியான கொரோனா வைரஸின் தீவிரமான நிலைக்குப்பிறகு மக்களிடையே உருவாக்கப்பட்டுள்ள உயிர் பயத்தைப் பயன்படுத்தி உலகுதழுவிய ஒரு தடுப்பூசித் திட்டத்தை வகுத்துச் செயல்படுத்துகையில் கிடைக்கக்கூடிய இலாபத்தை பங்குபோட்டுக் கொள்வதற்கான சண்டையாகவே இதைக் காணமுடிகிறது. இன்னும் ஓராண்டு காலத்தில் மருந்து சந்தைக்கு வருமென்று எதிர்பார்க்கும் வேளையில் ஏகாதிபத்தியவாதிகள் வியாபாரத்திற்கு உதவும்

வகையில் உலகுதழுவிய தடுப்பூசித் திட்டத்தை வகுத்துக் கொண்டிருக்கின்றனர்.

## இந்திய பாரம்பரிய மருத்துவமும் கொரோனா தொற்றும்

பாரம்பரிய மருத்துவமுறைகளை ஒருங்கிணைப்பது மிகவும் அத்தியாவசியமானதாகும். வூஹானில் தீவிரத் தொற்று ஏற்பட்டிருந்தநிலையில் அதைத் தடுப்பதற்காக நவீன மருந்துகளை, வேகமாகவும் நோயைத் தீர்க்கும் விதமாகக் கடுமையாகவும் பிரயோகித்து காப்பாற்ற முனைந்தனர். இன்னொரு பக்கம் 'அசிம்டோமேடிக் ஹெல்தி பாஸிட்டிவ் பீப்பிள்' எனும் கொரோனா நோய்த்தொற்று உள்ள மனிதர்களிடம் 'க்யூபிடி' எனும் சீனக் கசாயத்தைப் பயன்படுத்திப் பார்த்தார்கள்; சீனப் பாரம்பரிய மருந்தான அது வேலை செய்வதை அறிவியல் அரங்கில் அறிவித்தார்கள்.

கோவிட் 19 வைரசால் பாதிக்கப்பட்டவருக்கு காய்ச்சலைக் குறைப்பதற்கும், நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிப்பதற்கும் பாரம்பரிய சீன மருத்துவம் பயனுள்ளதாக இருக்கிறது என்று சீன மருத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். பாரம்பரிய சீன மருத்துவம் (டி.சி.எம்) சீனாவின் 90 சதவீதத்திற்கும் அதிகமான கோவிட் -19 நோயாளிகளுக்கு பயன்படுத்தப்படுகிறது. மிகவும் பாதிக்கப்பட்டுள்ள நகரமான வூஹானில், தற்காலிக மருத்துவமனைகளில் உள்ள அனைத்து நோயாளிகளின் மீட்பு விகிதங்களை அதிகரிக்கவும் இறப்பு விகிதங்களைக் குறைக்கவும் TCM ஐப் பயன்படுத்துகின்றனர்.

தற்போது மற்ற நாடுகளில் கொரோனா வைரஸ் பரவுவது மோசமடைந்து வருவதால், வூஹானில் COVID-19 க்கு எதிராக போராடுவதில் முன்னணியாக இருந்த சீன மருத்துவர்கள் வீடியோ கான்பரன்சிங் வழியாக இந்தியா, பாகிஸ்தான், கனடா மற்றும் இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கு பாரம்பரிய சீன மருத்துவம் (TCM) குறித்தான தகவல்களையும் அனுபவங்களையும் பகிர்ந்து வருகின்றனர். "கோவிட் 19 தொற்றுநோயைத் தடுப்பதிலும் கட்டுப்படுத்துவதிலும் டி.சி.எம் இன் ஆரம்ப கட்ட பயன்பாடு குறிப்பிடத்தக்க பயனைத் தந்தது. லேசான அறிகுறிகள் உள்ள நோயாளிகளுக்கு டி.சி.எம் நன்கு பலனளித்தது" என்று சீன மருத்துவ அறிவியல்

அகாடமியின் துணைத் தலைவர் லி ஹாவ் கூறினார். சீனாவில் உள்ள டி.சி.எம் வல்லுநர்கள் சீன மற்றும் அலோபதி மருத்துவ சிகிச்சையின் கலவையைத் தேர்ந்தெடுத்துள்ளனர்.

மேற்கூறிய சீனாவின் அனுபவங்களைக் கணக்கில் கொண்டு, இந்தியாவின் பாரம்பரிய மருத்துவமான சித்தமருத்துவத்தில் கபசுரக் குடிநீரும், ஆயுர்வேதத்திலும், இந்தியாவில் நீண்டகாலமாகப் பயன்படுத்தப்பட்டு வரும் ஜெர்மன் மருத்துவமான ஓமியோபதியிலும் சில மருந்துகள் ஆயுஷ் துறையின் மூலம் முன்மொழியப்பட்டுள்ளன. ஏற்கனவே டெங்கு, சிக்கன்குனியா போன்ற நோய்களால் மக்கள் பாதிக்கப்பட்ட போது ஆங்கில மருத்துவத்தால் தீர்வுகாண முடியாத நிலையில் சித்தமருத்துவத்தின் நிலவேம்புக் குடிநீர், பப்பாளி இலைச்சாறு போன்றவை பெரிய அளவிலான நோய்மீட்பு மருந்துகளாகப் பயன்பட்டன. ஆனாலும் இத்தகைய மருத்துவமுறைகள் திட்டமிட்டே தவிர்க்கப்பட்டு வருகிறது. ஏனென்றால் பாரம்பரிய மருத்துவத்தின் வளர்ச்சி அலோபதியின் வணிகக் கொள்ளைக்கு எதிராக மாறும் என்று ஏகாதிபத்தியவாதிகள் கருதுகின்றனர். அலோபதி மருத்துவமான ஆங்கில மருத்துவத்தில் ஏகாதிபத்திய கார்ப்பரேட்டுகள் ஆதிக்கம் செலுத்துவதும், அவர்களின் வணிகரீதியான இலாபமும் பாதிக்கப்படும் என்று அஞ்சுகின்றனர். இதுவே பாரம்பரிய மருத்துவமுறைகளைப் புறக்கணிப்பதற்கான அடிப்படையாக இருக்கிறது. கொரோனா போன்ற கொள்ளைநோயால் உலகம் பதறிக் கிடக்கும் இந்தச் சூழலில் மனித உயிர்களைக் காப்பதற்கான வழிகள் எதையும் புறக்கணிக்காமல் அனைத்து வகையான மருத்துவத்தின் ஒருங்கிணைந்த அணுகுமுறையைக் கடைபிடிக்க வேண்டியது அவசியத்திலும் அவசியமாகும். எனவே, கோவிட்19 நோய்த்தொற்றை எதிர்த்துப் போராடுவதில் இந்திய பாரம்பரிய மருத்துவமுறைகளையும் பயன்படுத்தவேண்டும். அதற்குத் தடையாக அலோபதி மருத்துவத்தை மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்ற ஏகாதிபத்திய கொள்கையையும், அதன்விளைவான கொள்ளையையும் எதிர்ப்பதும், அதன் அடிப்படையான நிதிமூலதன ஆதிக்கத்தை எதிர்த்துப்

போராடுவதும் உயிர்களைக் காக்கவேண்டிய இந்த நேரத்தில் அவசியத்திலும் அவசியமாகும்.

## கொரோனா வைரசும், மதவெறி அரசியலும்

காவி கார்ப்பரேட் பாசிச மோடி கும்பல் தற்போது கொரோனா வைரஸ் தாக்குதலின் பிரச்சனைகளை மதவாத அடிப்படையில் திசைதிருப்ப முயற்சிக்கின்றனர். கொரோனாவால் முடக்கப்பட்டுள்ள மக்களின் வாழ்வாதாரத்தை பற்றி கவலைப்படாமல், சரி செய்ய எந்த நடவடிக்கையும் எடுக்காமல், கொரோனா வைரஸ் இந்தியா முழுவதும் இஸ்லாமியர்களால் தான் பரப்பப்பட்டது என்ற பாசிச மத அடிப்படைவாத கருத்தாக்கத்தை பிரச்சாரம் செய்து வருகிறது மோடி கும்பல். மார்ச் 20 வரை கொரோனா வைரஸ் பற்றிய விரிவான பார்வையே இந்திய அரசுக்குக் கிடையாது. இவைகளெல்லாம் அரசு நிர்வாகத்தின் முழுமையான தோல்விகள்! முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைத்த கதையாய், மொத்த பழியையும் டில்லி நிஜாமுதீன் மார்கஸில் கூடிய தப்லீக் ஜமாத்தினரின் மீது சுமத்துவது பாசிச அரசின் அயோக்கியத்தனமாகும். தப்லீக் ஜமாத்தை பற்றி பேசும் இவர்கள் ஈஷா யோகா மையம் ஜக்கியை பற்றி வாய் திறப்பதில்லை; ஊரடங்கு உத்தரவு இருக்கும்போதே ராமர் கோயிலுக்கு பூஜை செய்த பாசிஸ்ட் யோகி ஆதித்யநாத்தை பற்றி வாய் திறப்பதில்லை.

நவீன மனித வாழ்வின் அச்சாணியாக அறிவுதான் இருக்கிறது. உலகமே அறிவின் பாதையில் நடக்கிறது. 21-ம் நூற்றாண்டில், அறிவுப் பாதையை நாடாமல் இருக்கும் நாடாக நம் நாடு இருக்கிறது. அதைவிட வேதனை, வாழ்க்கையின் சிக்கல்களுக்கு, புராண இதிகாசங்களில் விடை தேடுவது, நம்புவது போன்ற பழைமையைப் போற்றி, அறிவுக்கு எதிராக இயங்கும் பேராபத்தான பிற்போக்குவாதிகளால் தான் நமது நாடு ஆளப்படுகிறது. கொரோனா வைரஸை எதிர்த்து போராடுவதற்கு கைத்தட்டச் சொல்லுவதும், மாட்டு மூத்திரத்தை அருந்தச் சொல்வதும், விளக்குகளை அணைத்து அகல் விளக்கை ஏற்றச் சொல்லுவது முட்டாள்த்தனத்தின் உச்சம். இது தான் பாசிஸ்டுகளின் உண்மையான முகம்.

புதிய காலனிய ஆதிக்கத்திற்கு சேவை செய்யும் காவி கார்ப்பரேட் பாசிசத்தை எதிர்த்து போராட அனைத்து புரட்சிகர ஜனநாயக சக்திகளும் ஓரணியில் திரளவேண்டிய தருணம் நெருங்கிவிட்டது. மக்களை நோய்களிலிருந்தும் பட்டினியிலிருந்தும் காப்பதற்கு வக்கற்ற இந்த ஏகாதிபத்திய சேவகர்களை விரட்டியடிக்க சபதம் ஏற்போம். உழைக்கும் மக்களுக்கான உண்மையான மக்கள் ஜனநாயக அரசைக் கட்டியமைக்க அணிதிரள வேண்டும்.

### ஊரடங்கால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு வாழ்வாதாரத்தை உறுதிசெய்

எந்தவித முன்தயாரிப்பும் இன்றி திடுதிப்பென அறிவிக்கப்பட்ட 21 நாள் ஊரடங்கு என்பது நாட்டின் அனைத்துத் தரப்பு மக்களின் வாழ்க்கையையும் ஒட்டுமொத்தமாகப் புரட்டிப்போட்டுள்ள நிலையில், எல்லா தொழில்களும் முடங்கிப்போய் கார்ப்பரேட் நிறுவனங்கள் முதல் கடைகளில் வேலைசெய்வோர் வரை இலட்சக்கணக்கான தொழிலாளர்கள் எந்தவிதமான சமூகப் பாதுகாப்புமின்றி வீதியில் விரட்டப்பட்டுள்ளனர். அதை நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் காணமுடிகிறது. புலம்பெயர் தொழிலாளர்களின் நிலைமையோ அதைவிடப் பரிதாபம். தமிழ்நாடு, கேரளா, கர்நாடகா, மகாராஷ்டிரம், குஜராத், டெல்லி என நாட்டின் முக்கியமான நகரங்களில் இரயில் நிலையங்களிலும், பேருந்து நிலையங்களிலும் ஒரே நேரத்தில் கூடியகூட்டம் என்பது நாட்டில் உழைக்கும் மக்களின் நிலைமையையும், அவர்களை அரசு கையாளுகின்ற முறையையும் வெட்டவெளிச்சமாக்கியது.

ஒருவரை ஒருவர் நெருங்கி நின்றாலே நோய்த்தொற்று ஏற்பட்டுவிடும் என்றும், அதனால்தான் இந்த ஊரடங்கு என்றும் கூறிய ஆட்சியாளர்கள், உழைக்கும் மக்களைப் பற்றி எந்தவிதமான அக்கறையுமின்றி போக்குவரத்தை நிறுத்தியதால் மக்கள் கூட்டம்கூட்டமாக ஒரே இடத்தில் குவிகின்ற நிலைமையை உருவாக்கியதோடல்லாமல் 400கி.மீ, 500கி.மீ தூரங்களுங்கு பசியோடும், பட்டினியோடும் குழந்தை குட்டிகளோடு கால்நடையாக நடந்துசெல்லும் அவலநிலைக்கு ஆளாக்கியுள்ளனர். இப்படி நடந்து சென்றதினால்

இதுவரை 30க்கும் மேற்பட்ட மக்கள் இறந்துள்ளனர். புலம்பெயர்ந்த தொழிலாளர்களை நாங்கள் அவரவர் இருக்கும் இடத்திலேயேதான் இருக்கச்சொன்னோம். அவர்கள்தான் கேட்காமல் இப்படி சொந்த ஊருக்குக் கிளம்பிவிட்டார்கள் என்று நாகூசாமல் தொழிலாளர்கள் மீதே பழியைப் போடுகின்றனர். தொழிலாளர்களுக்கு ஆதரவாக இருந்த ஒருசில சட்டங்களையும் திருத்தி உரிமைகளோ, சலுகைகளோ ஏதுமற்ற கொத்தடிமைத் தொழிலாளர்களாக்கி பன்னாட்டு, உள்நாட்டு கார்ப்பரேட்டுகளுக்கு சாதகமாக எப்போது வேண்டுமானாலும் வேலையில் அமர்த்தவும், துரத்தவுமான வழிமுறைகளை ஏற்படுத்திக்கொடுத்தபின், சமூகப்பொறுப்பு என்பதே கார்ப்பரேட்டுகளுக்குத் தேவையில்லை என்பதை அங்கீகரித்துவிட்டபின் இந்தத் தொழிலாளர்களை இருந்த இடத்திலேயே இருங்கள் என்று சொல்லக்கூடிய அருகதை இந்த ஆட்சியாளர்களுக்கு இருக்கிறதா? அப்படி அவர்கள் அந்தந்த இடங்களிலேயே இருப்பதற்கான முன்னேற்பாடுகளை செய்தனரா? தொழிலாளர்களின் உழைப்பைச் சுரண்டியவர்கள் இப்போது அவர்களை ஆடுமாடுகள் போல் விரட்டிவிட்டனர். அவ்வாறு விரட்டியதற்காக அவர்கள்மீது நடவடிக்கை எடுக்கமுடியுமா? வேலை இல்லை என்றால், கூலி இல்லை. கூலி இல்லையென்றால் உணவு இல்லை, இருப்பிடம் இல்லை. அவர்கள் எப்படி இந்த நகரங்களில் வருமானமே இல்லாமல் வாழமுடியும் என்பதை இந்த ஆட்சியாளர்கள் உணர்ந்தார்களா? இவர்கள் கொடுக்கும் ரூ.1000 மற்றும் ரூ.2000ற்கு வாழ்ந்துவிட முடியுமா? அதை வாங்குவதற்கான ஏற்பாடுகளாவது இருக்கிறதா? அவர்களுக்கான வாழ்வாதாரத்திற்கான பண உதவியை இப்போதேனும் தாமதிக்காமல் இந்த ஆட்சியாளர்கள் செய்வார்களா? மத்திய மாநில அரசுகள் உடனடியாக இதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். அதை விடுத்து போலீசை ஏவிவிட்டு மக்களை காட்டுமிராண்டித்தனமாக ஒடுக்குவது பாசிச வழிமுறையேயாகும். மத்திய மாநில தரகு பாசிச கும்பலே மக்கள் மீதான பாசிச அடக்குமுறையை உடனே நிறுத்து. அவர்களின் வாழ்வாதாரத்தை உடனே உத்திரவாதப்படுத்து.

## மருத்துவ, சுகாதாரத்தை அழித்த உலகமயக் கொள்கைகளைக் கைவிடு

இந்தக் கொரோனா கொள்ளைநோய் ஆட்சியாளர்கள் கடைபிடிக்கும் தாராளமய, தனியார்மய, உலகமயக் கொள்கைகளின் அவலத்தை மருத்துவத் துறையின் கையாலாகாத தன்மையின் வாயிலாகவும் தொழிலாளர்கள் தெருவில் விடப்பட்ட மோசமான நிலைமையிலிருந்தும் வெட்டவெளிச்சமாக்கப்பட்டுள்ளது. இன்றைய அவலநிலைமைகள் கொரோனா நோயின் தாக்கத்தைவிட மிகக் கொடியதாக இருக்கிறது. எனவே இவற்றுக்கெல்லாம் காரணமாக இருக்கக்கூடிய ஏகாதிபத்திய புதியகாலனிய ஆதரவுக் புதிய காலனியக் கொள்கையான தாராளமய, தனியார்மய, உலகமயக் கொள்கைகளைக் கைவிட்டு மக்களின் அத்தியாவசியத் தேவையான மருத்துவம், சுகாதாரம் ஆகியவற்றுக்கு போதுமான நிதி ஒதுக்கக் கோரியும் போராடுவோம். தனியார் மருத்துவ மனைகளை அரசின் கட்டுப்பாட்டின் கீழ் உடனடியாகக் கொண்டுவந்து, நோய்த் தொற்றை கண்டறிவதற்கான சோதனைகளை தீவிரப்படுத்தி, நோயாளிகளை கண்டறிந்து, அவர்களை தனிமைப்படுத்தி தீவிர சிகிச்சையளிக்க போர்க்கால அடிப்படையில் திட்டமிட்டு செயல்படுத்த மத்திய மாநில அரசுகளை வற்புறுத்துவோம்.

மேலும் ஊரடங்கு அமலில் உள்ள காலம் முழுவதும், விடுகளுக்குள் முடங்கியிருக்கும் அமைப்பாக்கப்படாத தினக்கூலித் தொழிலாளர்கள், சிறுகடைவியாபாரிகள், ஆட்டோ, டாக்சி ஓட்டுனர்கள் போன்ற எழை எளிய மக்களுக்கு அத்தியாவசிய உணவுப் பொருட்களை தேவையான அளவுக்கு இலவசமாக வீடு வீடாக விநியோகிக்க வேண்டும், இதர செலவிற்காக மாதம் ஒன்றுக்கு ரூ 10,000/- வழங்கவேண்டும் போன்ற கோரிக்கைகளை முன்வைத்து நிறைவேற்றப் போராடுவோம்.

★★★



# மோடி அரசே!

## கொரோனா நோய்க்கு ஊரடங்கு மட்டுமே தீர்வாகாது!

## மக்களை பட்டினி என்ற வைரசால் கொல்லாதே!

- நோயாளிகளைக் கண்டறிதல், தனிமைப்படுத்துதல், சிகிச்சை அளித்தல் ஆகிய உலக சுகாதார நிறுவனத்தின் வழிகாட்டும் நெறிமுறைகளை நடைமுறைப்படுத்து!
- கொரோனா நோயை கண்டறியும் சோதனை மையங்களை அதிகப்படுத்து!
- தனியார் மருத்துவமனைகள் அனைத்தையும் உடனடியாக அரசுடமையாக்கு!
- மருத்துவ, சுகாதார வசதிகளை மேம்படுத்த அவசர கால நிதி திட்டத்தைச் செயல்படுத்து!
- மருத்துவ மற்றும் சுகாதாரப் பணியாளர்கள் பயன்படுத்தும் பாதுகாப்பு உபகரணங்களை போதுமான அளவிற்கு கிடைக்க ஏற்பாடு செய்!
- உயிரிழப்புகளைத் தடுக்க சுவாசக் கருவிகளின் (வெண்டிலேடர்) இருப்பை அதிகப்படுத்து!
- இந்திய பாரம்பரிய மருத்துவ முறைகளைப் பயன்படுத்து!
- முழுமையான நிவாரணப் பணிக்குத் தேவைப்படும் ரூபாய் 7 லட்சம் கோடியை ஒதுக்கு!

**தமிழக அரசே!**

- ஊரடங்கு உத்தரவால் முடங்கியுள்ள குடும்பங்களுக்கு குறைந்தபட்சம் ரூபாய் 10,000 வழங்கு!
- ஊரடங்கு காலத்தில் காய்கறி, உணவுப் பொருட்களை தட்டுப்பாடின்றி இலவசமாக மக்களுக்கு வீடுவீடாக வழங்கு!
- ஏழை, எளிய மக்களுக்கும், புலம்பெயர்ந்த தொழிலாளர்களுக்கும் இலவச சமுதாய உணவுக் கூடங்களை உடனே திற!
- காவல்துறையே மக்கள் மீதான காட்டுமிராண்டித்தனமான தாக்குதலை உடனே நிறுத்து!

- மருத்துவ, சுகாதாரக் கட்டமைப்பை சீர்குலைத்த புதிய காலனிய உலகமயக் கொள்கைகளைக் கைவிடு!


**மக்கள் ஜனநாயக இளைஞர் முன்னணி**

தமிழ்நாடு 9382815231